# முதல் தாம்பூலம்



நா. ராமச்சந்திரன்







'தேவன்'
(ஆனந்தவிகடன்)
முன்னுரையுடன்



வித்யாசங்கர் பப்ளிகேஷன்ஸ்
எட்வர்டு எல்லியட்ஸ் ரோடு,
மயிலாப்பூர் :: சென்னை-4.

# ஒரு வார்த்தை :

திருப்தியையும் சந்துஷ்டியையும் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதத்தில் அடைகிருர்கள். என்னைப் பொறுத்தவரையில் எனக்கு ஆத்ம திருப்தியும், மனச் சந்தோஷமும் நான் எழுதும் போதும். அதை அச்சுப் போட்டுப் படிக்கும்போதும்தான் உண்டாகின்றன. எழுதுவது ஒரு கலை என்று சொல்லுகிருர்கள். அந்தக் கலைக் கூடத்தில் நான் என்றும் மாணுக்கனுக இருக்கத் தான் விரும்புகிறேன்.

பல வருடங்களாகச் சிறுகதைகள் எழுதிக்கொண்டிருக்கிறேன். என்னுடைய நீண்ட நாளைய ஆசை இம்மாதிரி ஒரு புத்தகம் வெளிவரவேண்டும் என்பது. அது இப்போது சித்தியாகியிருக்கிறது.

இப்புத்தகத்தில் பிரசுரமாயிருக்கும் கதைகள் எல்லாம் வெவ்வேறு சமயங்களில், தமிழ் நாட்டில் பிரபலமாக இருக்கும் ஆனந்த விகடன், தினமணி கதிர், அமுதசுரபி, கல்கி கலைமகள், குமுதம் ஆகிய பத்திரிகைகளில் வெளிவந்தவை. இவற்றை வெளியிட அநுமதி தந்த பத்திரிகை ஆசிரியர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நம்முடைய தர்மத்திற்கும், பண்பிற்கும் எடுத்துக்காட்டாக இன்று ஸ்ரீ ஆர். மகாதேவன் அவர்கள் விளங்குகிருர்கள். எழுத்தாளர் பரம்பரையை வளர்க்கவேண்டும் என்ற அவா மிகுதியாக உள்ளவர்கள். அவர்கள் இப்புத்தகத்திற்கு மனமுவந்து முகவுரை எழுதியளித்தது என் பாக்யம். அவர்களுக்கு என் நன்றி.

எழுத்தாளர் குழாத்தில் என் இன்றியமையாத இனிய நண்பர் 'அமுதசுரபி' ஆசிரியர் ஸ்ரீ சு. வேம்பு அவர்களின் முயற்சி மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் இப்புத்தகம் வெளிவருவதேது? அவர் அன்புக்கு ஈடே கிடையாது. அந்த அன்பிற்கு என் நன்றி எம்மாத்திரம்?

ஸ்ரீ கண்ணன் அவர்களின் அட்டைப் படம் இப்புத்தகத்தைச் சிறந்த முறையில் எடுத்துக்காட்டும் அளவில் அமைந்துள்ளது. அவரது ஒத்துழைப்பிற்கு என் நன்றி.

இப்புத்தகம் வெளியிடுவதில் ஆர்வம் காட்டிய ஸ்ரீ வெ. ராமன் அவர்களுக்கும், சிறந்த முறையில் பிரசுரம் செய்த வித்யாசங்கர் பப்ளிகேஷன்ஸாருக்கும் என் நன்றி என்றும் உண்டு.

—நா. ராமச்சந்திரன்

# பொருள் அடக்கம்



# முன்னுரை

''என்ன ஸார், இந்தப் புஸ்தகத்தைப் படித்துவிட்டீர்களா?''

''இல்லை; இப்போதுதானே விமர்சனம் எழுதி முடித்திருக்கிறேன்!''

—ஒரு விகடத் துணுக்கு

சில தினங்களுக்கு முன்பு ஒரு இளைஞர் என்னைத் தேடிக்கொண்டு வந்தார். தமக்குச் சிறுகதைகள் எழுதவேண்டும் என்ற ஆர்வம் மிக அதிகமாக இருக்கிறதென்று சொன்னார். நான்மட்டும் உத்ஸாக மூட்டினால், விரைவில் முன்னுக்கு வந்துவிடும் நம்பிக்கை கொண்டிருப்பதாகவும் அவர் கூறினார்.

அவர் கொடுத்த கையெழுத்துப் பிரதியை வாங்கிக்கொண்டு, ''கட்டாயம் நானே படித்துப் பார்க்கிறேன்'' என்று உறுதி கூறினேன். ''ஏதேனும் பிழை இருந்தால் திருத்திக்கொள்ளுங்கள். யோசனை சொல்லுங்கள். நான் முதல் தடவையாக எழுதுகிறேன்'' என்று அவர் கேட்டுக்கொண்டார். போகும்போது, ''கொஞ்சம் கவனித்துக் கொள்ளவேண்டும். என் முதல் கதை இது; ஆவலுடன் உங்கள் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு வெளியே சென்றார்.

குழந்தைகள் அழகென்றாலும் இல்லையென்றாலும், பெற்றோர் கண்ணுக்கு அழகாகவே தோன்றும் அல்லவா? கதைகள் எல்லாம் கற்பனையின் குழந்தைகள் தானே! இந்த இளைஞர் காட்டிய ஆர்வத்தையும் கவலையையும் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. அவர் கதையை உடனே படித்துப் பார்த்தேன். சில மாறுதல்கள் செய்து, கொஞ்சம் நீளத்தைக் குறைத்துவிட்டால், பிரசுரத்திற்கு ஏற்றபடி செய்து விடலாம் என்று நினைத்து அவ்வாறே அவருக்கு எழுதித் தபாலிலும் போட்டுவிட்டேன்.

ஒரு வாரத்திற்குப் பின் அவர் மறுபடி வந்தார். முன்பு காணப்பித்த விநயம் அப்போது இல்லை. ''திரும்பி வந்தது'' என்றார், கண்களால் என்னை ஒரு வெட்டு வெட்டி.

''நான்தான் அனுப்பினேன்!''

"இதோ வேறொரு கதை இருக்கிறது. இது உங்களுக்குப் பிரயோஜனப்படுமா, பாருங்கள்!"

"பேஷாகப் பார்க்கிறேன்! முதல் கதையைக்கூட நான் கூறியபடி நீங்கள் மாறுதல்கள் செய்து கொடுக்கலாம்" என்றேன். உடனே அவர் சட்டைப் பையிலிருந்து ஒரு கார்டை எடுத்து என்னிடம் விசிறிப் போட்டார். "படித்துப் பாருங்கள்!" என்றார்.

அது வேறொரு பத்திரிகையிலிருந்து அவருக்கு வந்திருந்த கடிதம். நான் திருப்பி அனுப்பியிருந்த கதையை அவர் அதற்கு அனுப்பியிருக்கிறார் அந்த ஆசிரியர், "உமது கதையைப் படித்துப் பார்த்தோம். அதைப் பிரசுரிக்கலாம் என்று முடிவு செய்திருக்கிறோம். கூடிய விரைவில் வெளியாகும்" என்று அதில் எழுதியிருந்தார்.

கார்டைத் திருப்பிக் கொடுத்து, "மிகவும் சந்தோஷம்" என்று சொன்னேன்.

"இப்போது கொடுத்த கதை உங்களுக்குத் தேவையில்லை என்றால், சீக்கிரம் திருப்பி விடுங்கள்" என்று சொல்லிவிட்டு விறைப்பாக எழுந்து போனார்.

இந்த இளைஞரிடம் எனக்குத் துளிகூட வருத்தம் இல்லை. நாம் எழுதுவதெல்லாம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலகாரம்; வாசகர்கள் தாம் விருந்தாளிகள். ஒருவருக்குப் பிடித்தது இன்னொருவருக்குப் பிடித்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. பாதாம் ஹல்வாவை விரும்புகிறவர்கள் உண்டு; பாதுஷாவை மண்டுகிறவர்களும் உண்டு. மஸால்வடைப் பிரியர், வெஜிடபிள் போண்டாவை அறவே வெறுக்கலாம்; ஒரு பத்திரிகைக்கு அமுதமாக இருப்பது, மற்றொன்றுக்கு விஷமாக இருக்கலாம். ஆகையால், விஷயத்தை மதிப்புப் போடுவதென்பது, தனி நபரையும், சந்தர்ப்பத்தையும் கூடப் பொறுத்திருக்கிறது என்று நான் சொல்வேன்......

புஸ்தகமே இல்லாத ஒரு உலகத்தை நினைத்துப் பார்க்கவும் முடியாது ஒரு மாத காலத்துக்குப் பத்திரிகைக்காரர்கள் ஒன்றும் பிரசுரிப்பதில்லை என்று ஒரு "ஸ்டிரைக்" செய்தால், உலகத்தில் சரிபாதி ஜனங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடுமோ என்று அஞ்சுகிறேன். படிப்பது, மூளைக்கு ஆகாரம் அளிப்பதாகும்; அதை நீடித்துப் பட்டினி போடுவது என்பது முடியாது. 'படிக்கா விரதம்" இருப்பதென்று நாம் ஒரு பிரதிக்ஞை செய்துகொண்டோமெனில்,

உண்ணாவிரதம் இருப்பவர்களில் அநேகரைப்போல் விரைவில் விரத பங்கம் செய்துதான் தீருவோம். ஒரு சர்க்கரைப் பொட்டலத்தைச் சுற்றியுள்ள பழைய தினசரியில் காணும் செய்திகளையாவது படிப்போம். அப்படி நம் ரத்தத்தில் ஊறிவிட்டது, அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை.

திறமைசாலிகளான எழுத்தாளர்கள் கையிலே எழுதுகோல் என்ற மந்திரக்கோலை வைத்திருக்கிறார்கள். அதைக் கொண்டு அவர்கள் தீட்டும் ஓவியங்களை நாம் கண்டவுடனே, வாழ்விலிருந்த துயரமெல்லாம் மறைந்து விட்டதுபோலும், உள்ளத்திலிருந்த அந்தகாரம் விலகிவிட்டது போலும், இன்னும் அநுபவிக்க அநேக சுகங்கள் காத்திருப்பது போலும், சாரமற்ற ஜீவிதத்திலேகூட ஒரு ருசி பிறக்கிறது. எழுத்தாளர் மட்டும் மனத்திற்குப் பிடித்தவராக அமைந்துவிட்டால், பூவுலகிலே சொர்க்கத்தைக் காணச் செய்வார்கள். 'அப்படியானால், எல்லாப் புஸ்தகங்களும் அந்த உணர்ச்சியை உண்டாக்குவதில்லையே' என்று கேட்கலாம். பிரம்மாவின் சிருஷ்டியில் கூடத்தான் குறைகள் மலிந்து கிடக்கின்றன. ஓர் உணர்ச்சியும் உண்டாக்காத புஸ்தகங்களும் உண்டு. எழுத்துலகில் 'பிறந்த செவிட்டூமைகள்' என்று வைத்துக்கொள்ளுங்களேன்! எழுத்தாளனின் மனவிஸ்தரிப்புக்கும், கற்பனை வேகத்துக்கும், சீரிய சிந்தனைகளுக்கும் ஏற்பவே அவன் எழுத்தும் அமையும். அநேக சமயங்களில் தான் அடையாமல், அடைய விரும்பும் லட்சியத்தைக்கொண்டு ஓர் ஆசிரியர் தீட்டிவிடலாம்; எல்லோரையுமே அது உயர்த்தும், வழிகாட்டும்.

நன்றாக எழுதவேண்டும் என்றால், நன்றாகச் சிந்தனை செய்ய வேண்டும்; அந்த அநுபவங்களை உணர்ந்து பார்க்கவேண்டும். பிறகு அவற்றை வீர்யம் குன்றாமல் சாஸனம் செய்யவேண்டும். நடுநிலையில் உள்ள ஒரு வாசகரின் ஸ்தானத்தில் நின்று நிர்த்தாக்ஷண்யமாகத் தனது எழுத்தை எடைபோடத் தைரியமுள்ள எழுத்தாளனுக்கு வாசகரிடையே செல்வாக்கு அதிகம் இருக்கும் என்பதில் சந்தேகம் வேண்டியதில்லை. அவர் எழுத்தில் அறிவும் இருக்கும்; ஆத்மாவும் பேசும்; சுவையும் மங்காது.

நான் அடிக்கடி சென்னைத் துறைமுகத்தில் கப்பல் வரும் தினங்களில் சென்று பார்ப்பது உண்டு. அங்கே காத்திருந்து உறவினர்களையும், நண்பர்களையும் வரவேற்கும் நகர வாசிகளைக் காண்

பேன். அப்போது என் கற்பனையில் ஒரு புதிய புஸ்தகம் வெளியாகும்போது எப்படி வாசகர்கள் வரவேற்பார்கள் என்ற எண்ணம் தான் தோன்றும். கப்பல் நிறைய அன்பர்கள், அவர்கள் கொண்டு வரும் சாமான்கள், நூதனமான பொருள்கள்; அதேபோல் புத்தகம் நிறைய அநேகப் பாத்திரங்கள், புதுப் புதுக் கருத்துக்கள், கவர்ச்சிகரமான விஷயங்கள். சுங்க அதிகாரிகள் பிரயாணிகளின் உடைமைகளை அலசி அலசிப் பார்க்கிறார்கள்; யார் பேச்சையும் நம்பாமல் பெட்டியைக் கவிழ்த்தும் கொட்டியும் சோதனை போடுகிறார்கள். 'அடிக்கடி பிரயாணம் செய்பவராயிற்றே' என்று சலுகைகள் காட்டுவதே கிடையாது; புதிய ஆசாமி என்று மன்னிப்பும் எதிர்பார்க்க முடியாது. இங்கே விமர்சகர்கள் புத்தகத்தின் உள்ளடக்கத்தைக் கவனிக்கிறார்கள். சிலவற்றை ஒதுக்குகிறார்கள். உண்மையான விமர்சகருக்குப் பெயர்போன எழுத்தாளர், ஆரம்ப எழுத்தாளர் என்ற வித்தியாசம் இல்லை.

ஆமாம், சிறுகதை எழுதுவது மிகவும் சிரமமா என்று கேட்கலாம். "மிகவும் லகு" என்று எஸ். வி. வி. அவர்கள் ஒரு சமயம் கூறினார்கள். 'ஒவ்வொரு மனிதனுமே ஒரு புதிய நூல் ஆயிற்றே! அவனை நன்கு ஆராய்ச்சி செய்யக் கற்றுக்கொண்டால், எண்ணற்ற கதைகள் எழுதலாமே!" என்று அவர் சொன்னார். வாழ்க்கை அநுபவங்களையும், குணசித்திரங்களையும் கலங்கவில்லாத நீரோடை போன்று தெள்ளத் தெளியத் தமது பேனாவினால் தீட்டும் சக்தி அவருக்கு இருந்தது. அப்படிச் சமூகத்தைக் கவனித்துப் புரிந்து கொண்டு எழுதும் ஆற்றல் பெற்றவர்கள் ஒரு சிலரேதான் இருக்க முடியும்.

"கல்கி" அவர்கள் சிறுகதை உலகத்திலே ஒரு புதிய சகாப்தத்தை ஆரம்பித்துவைத்தார். "தொடரும்" என்று அவர் பத்திரிகையில் போட்டுவிட்டு, அடுத்த வெள்ளிக்கிழமை பத்திரிகை, வரும் வரையில் கட்டுக் கடங்காத ஆவலைத் தூண்டிவிட்டார். அவர் கதைகளில் கற்பனை உலகிலேயே வாசகர்களை எங்கெங்கோ அழைத்துச் சென்றார். அவருடன் மலைகள்மீது சஞ்சரித்திருக்கிறோம். மடுக்களின் அடியே ஆராய்ந்திருக்கிறோம். ஸம்ஸார ஸாகரத்தில் நீச்சலடித்திருக்கிறோம். ஒருபோதும் வாசகர்களுக்குப் பிரயாண அலுப்புத் தெரியாமல் பார்த்துக்கொண்டார். அதுமட்டுமன்று; கடைசியில் வாசகரைச் சௌக்யமாக, ஆடாமல் அலுங்காமல், தொடங்கின இடத்தில் சமதரையில் கொண்டு வந்தும் விடுவார்.

படித்து முடித்த பின்பு ஒரு நல்ல கனவு லோகத்திலிருந்து வந்த பிரமை ஏற்படும். பல புதிய அநுபவங்களைப் பெற்றுப் பின் தேனூறும் நடையைச் சுவைத்தபடி 'ஜம்'மென்று திரும்ப வருவது ஓர் ஆனந்தமே அல்லவா?

சிறிய கதையானாலும், பெரிய கதையானாலும், அதை எடை போடுகிறவர்கள், அது ஜீவித்திருக்குமா என்பதைக்கொண்டே பார்ப்பது வழக்கம். பழமொழிகள் மாதிரி நூற்றாண்டு நூற்றாண்டாக நிற்கும் சிரஞ்சீவிக் கதைகளுக்கு மதிப்பு அதிகம் கொடுப்பார்கள். ஆனால், சிரஞ்சீவிக் கதைகள், நான் அறிந்த வரையில், ஆசிரியர் காலமான பிறகே சிரஞ்சீவித்தன்மையைப் பெறுகின்றன.

அன்றாடம் பிழைப்புக்கெழுதும் எழுத்தாளன், முதலில் அவன் வாழும் சமூகத்தைத் திருப்தி செய்ய வேண்டியிருக்கிறது. அப்போது தான் அவர் பாங்கியில் கொஞ்சம் பணம் சேரும். 'Posterity has no banking account' என்பதை ஒரு பழமொழியாகவேகூடச் சொல்லலாம். ஓர் இளைஞன் தவம் செய்கிறான். கடுந்தவம் அது. பிரம்மா (அல்லது விஷ்ணு, அல்லது சிவன் என்று இஷ்டம் போல் வைத்துக்கொள்ளுங்கள்) பிரத்யக்ஷமாகிறார். "பக்தா! மெச்சினேம் உன் தவத்தை! கண்ணைத் திறந்து உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்!......" என்று திருவாய் மலர்கின்றார்.

இளைஞன் புளகாங்கிதனாகி, "பிரபோ! ஒரே ஒரு வரம்தான் எனக்கு வேண்டும். நான் ஓர் எழுத்தாளனாக வேண்டும்" என்று கேட்கிறான். (தயவு செய்து யாரும் குறுக்கே பேசவேண்டாம். மேலே நடந்ததைக் கேளுங்கள்.)

பகவானே சற்றுத் திகைத்துப் போனார். பிறகு சமாளித்துக் கொண்டு, "கொடுத்தேன் நீ வேண்டிய வரத்தை! ஆனால் நீயாகத் தெளிவு செய்துகொள்ள வேண்டிய ஒரு பகுதியும் இதில் உண்டு. நீ எழுதும் ஒவ்வொரு நூலும் உன் வாழ்நாளில் லக்ஷக் கணக்கில் விற்பனையாகி, உனக்கும் நிறையப் பொருள் சேர்த்துத் தந்து, உன்னுடன் மடிவது வேண்டுமா? அல்லது, உன் வாழ்நாளில் நீயும் அச்சுக்கோப்பவரும், விமர்சகரும் (?) தவிர, வேறு யாராலும் படிக்கப்படாமல் இருந்து, நீ பட்டினியால் வாடி மெலிந்து இறந்து போனபின் 'குபீர்' என்று பிராபல்யமாகி லக்ஷக் கணக்கில்

விற்பனையாகிச் சிரஞ்சீவித்வம் பெறுவது வேண்டுமா?'' என்று கேட்டார்.

இளைஞன் என்ன சொன்னான் என்று தெரியாது. இதே கேள்வியை என்னைக் கேட்டிருந்தால், "கடவுளே! என் கண் எதிரில் என் புஸ்தகங்கள் விற்பதையே நான் பார்க்க விரும்பு கிறேன்'' என்றுதான் சொல்வேன். 'என் பெயர் அமரத்வம் அடைய எனக்கு ஆசையில்லை; நான் பணத்தாசை பிடித்தவன்' என்று நினைக்காதீர்கள். நான் வேறு காரணத்தினால் சொல்லு கிறேன். எழுத்தாளனுடைய ஜீவனே பிறர் உத்ஸாகப்படுத்து வதில் இருக்கிறது; அதைக் கொண்டுதான் அவன் அடுத்த கதை யோ, புஸ்தகமோ எழுதத் தென்பு பெறவேண்டும். ஓர் எழுத் தாளனுடைய கியாதி அவன் எழுதிவிட்ட புஸ்தகத்தில் இல்லை; இனி எழுதப்போகும் அடுத்த புத்தகத்தில்தான் இருக்கிறது!

ஒரு கதாசிரியனிடம் போய், "நீர் எழுதுவது நன்றாகவே இல்லை'' என்று சொல்லிப் பாருங்கள். அவன் புன்னகை செய்து கொண்டிருந்தால்கூட, உள்ளே குமுறிக் கொண்டிருப்பான். (தனி யாக மாட்டிக்கொண்டால் ஸெக்ஷன் 302 ஐ. பி. ஸியை மீற முயன்றாலும் ஆச்சரியம் இல்லை!) "படித்தேன்! நன்றாக எழுதி விட்டீர்கள்'' என்று சொல்லுங்கள். உடம்பெல்லாம் அமிர்தம் பாய்வதுபோல் அவன் உணர்வான். உங்களை வாழ்த்துவான்; உங்கள் பரம்பரையையே போற்றுவான். அவன் புத்தகத்தில் ஒன்றை அன்பளிப்பாகவும் உடனே கொடுத்துவிடுவான்! (இதற்கு நான்கூட விதிவிலக்கு இல்லை என்பதை ஒப்புக்கொள்கிறேன்.)

அதெல்லாம் சரி, எழுத்தாளருக்குக் கடமையே இல்லையா?— என்று கேட்கலாம். இருக்கிறது. அவர் எழுதும் ஒவ்வொன்றை யும் கொஞ்சநாள் வைத்திருந்து படித்துப் பார்ப்பாராக! இரண்டாவ தாக, அவர் நூல்களை, வாழ்க்கையின் நுட்பங்களை நன்கு காண மூக்குக் கண்ணாடியாக வாசகர்கள் எப்போதேனும் உபயோகிக்க முடியுமா என்று பார்க்கட்டும்.

கதை சிரஞ்சீவியாக இருக்குமா, உடனடியாகப் பணம் கொடுக் குமா, அல்லது செவிட்டூமையாக இருக்குமா என்பதை, அப் போதே ஜாதகம் கணித்துப் பார்க்கத் தேவையில்லை. மனத்திற்குப் பிடித்திருந்து, பிறருக்கு அதைச் சொல்லவேண்டும் என்று ஆர்வம் இருக்கும் போது, எந்த விஷயத்தையும் எழுதலாம்.

பழசைப் புதுசு மாதிரி எழுதலாம்; புதுசைப் பழசுமாதிரி எழுதலாம். தனது சொந்த நடையில் தைரியமாக எழுதலாம். பிரபல எழுத்தாளரான பிறகு, பேரைப் போடாமல் எழுதினுல் கூட இன்ன பேர்வழி எழுதினது என்று வாசகர் ஊகித்துவிடுவார்.

ஸ்ரீ நா. ராமச்சந்திரன் அநேகக் கதைகள் எழுதி, என்னிடம் கொடுத்திருக்கிறுர். நான் அவைகளைப் பிரசுரம் செய்திருக்கிறேன். அவரிடம் ஒரு விசேஷமான குணம் நான் கண்டிருப்பது, அநேகமாக அநுபவங்களை வைத்தே அவர் கதைகளை எழுதுகிறுர் என்பது. ஒரே முட்டாக அவர் தாவுவதில்லை. எளிய விஷயங்களை, எளியநடையில், நன்ருக எழுதுகிறுர். அவர் கதைகள் ஒரு கொத்தாக வருவதில் எனக்கு மிகவும் சந்தோஷம் அவர் புத்தகத்துக்கு நல்ல ஆதரவு இருக்கும் என்று எதிர்பார்க்கிறேன். ஏனென்ருல், ஒருபோதும் ஸ்ரீ ராமச்சந்திரன் ஊக்கம் குன்றியவரில்லை. எழுத்துத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களை அச்சகம் 'கொறடா' கொடுத்து எழுதவைக்கும். அந்தமாதிரி தூண்டுகோல் ஏதும் இன்றி, தாமே உத்ஸாகமாக எழுதுகிறுர். பிறருடைய அபிப்பிராயம் கேட்டுக்கொள்ள அவருக்குப் பொறுமை இருக்கிறது.

இது அவருடைய முதல் புஸ்தகம். 'முதல் தாம்பூலம்' என்கிற கதையுடன் ஆரம்பமாகி, 'பொம்மைக் கல்யாண'த்தில் முடிகிறது. இடையில் 'கெட்டி மேளம்' வேறு உற்சாகமாக அடிக்கிறது. அநுபவித்து வாசகர்கள் வாசிக்கலாம்.

இந்தக் கதைக் கொத்திலுள்ள சிறு கதைகளை நான் ஏற்கெனவே பத்திரிகைகளில் படித்திருக்கிறேன். இப்போது புத்தக உருவில் படித்தேன். சிறு கதைகளைத் தேர்ந்தெடுப்பதில் கவனமும் ரஸனையும் காண்கிறேன். அநேக வித பாத்திரங்களைச் சந்திக்க வைத்திருக்கிறுர் வாழ்க்கையை அநுபவித்த இளம் உள்ளங்களை ஆராய்ச்சி செய்திருக்கிறுர்; வாழ்ந்துவிட்டு உலக ஞானம் பெற்ற ஆத்மாக்களுடனும் பழகவைத்திருக்கிறுர். சம்பாஷணைகள் விஷயத்துக்குப் பொருத்தமாக உள்ளன. வார்த்தைகளை வீணடிக்காமல் செட்டாக எழுதியிருக்கிறுர். ஸ்வபாவமாகவே, கற்பனையின் ஓட்டமும் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற நடையும் அவருக்கு உருவாகிக்கொண்டு வருகிறது. நல்ல சூசகங்கள் இவை. 'கதைகள் எல்லாம் தாமாகப் பழுத்த பழங்கள்' என்ற நல்ல அபிப்பிராயம் கொடுக்குமெனில் நான் ஆச்சரியப்பட மாட்டேன்.

சிறுகதைக் கொத்துக்களை வாசிப்பதுபற்றி, வாசகர்களிடம் சொல்ல எனக்கு ஒரு யோசனை இருக்கிறது. இவைகளை நாவல் படிப்பதுபோல் ஒரே மூச்சில் படித்துத் தீர்த்துவிடக்கூடாது. ஒவ்வொரு கதையை ஒவ்வொரு சமயத்தில் படித்துப் பார்க்கவேண்டும் என்பேன். கதை ஆசிரியர் இவைகளை எல்லாம் ஒரு திட்டம் போட்டுக்கொண்டு ஒரே சமயத்தில் எழுதவில்லையே! ஒவ்வொன்றாகப் படிப்பதையே நான் சிபார்சு செய்வேன். கல்யாண வீட்டிலிருந்து சீக்காளி வீட்டுக்கும், கோவிலிலிருந்து ரயிலடிக்கும், மாணவனிடமிருந்து வேதாந்தியிடமும் தாவுவது எத்தனை பிரயாஸை!

இந்த யோசனையை ஒப்புக்கொண்டாலும் இல்லாவிட்டாலும், ஸ்ரீ ராமச்சந்திரனுடைய கதைகள் ஒரே சீராக நல்ல தொகுப்பாக அமைந்திருக்கின்றன என்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அவருக்கு என் பாராட்டுகள். அவர் தொடர்ந்து இலக்கிய சேவை செய்து வாசகர்களின் பேரபிமானத்தைப் பெற்றுவருவார் என்று எதிர்பார்க்கிறேன்.

ஷண்முக விலாஸம்
சென்னை—18.
22—8—1955.

ஆர். மகாதேவன்
"தேவன்"
'ஆனந்தவிகடன்'




# முதல் தாம்பூலம்

"என்ன இப்படிச் செய்து இருக்கிறீர்களே? டிக்கெட்டு வாங்கும்போது நான் படித்துப் படித்துச் சொன்னேன். கடைசியில் என்னுடைய 'ஸீட்'டை ஆண்கள் பக்கத்திலேயே போட்டிருக்கிறீர்களே?" என்று சற்றுக் கோபமாகவே கேட்டாள் இந்திராணி.

ராமமூர்த்தி பதில் சொல்வதற்குச் சற்றுத் தயங்கினான். பிறகு சமாளித்துக் கொண்டான். "கடைசி 'ஸீட்'டாய் இருக்கிறதே என்று போட்டு வைத்தேன். வேண்டுமானால் நாளைக்கே மாற்றி விடுகிறேன்" என்று சமாதானம் சொன்னான்.

நல்ல வேளையாக இந்திராணி பதில் ஒன்றும் பேசவில்லை. "நாளைக்கு ஞாபகமாக அதை முதலில் செய்து விடுங்கள்" என்று ரத்தினச் சுருக்கமாகப் பதில் சொல்லி விட்டுப் போய்விட்டாள்.

அவளது சிவந்த மேனிக்கு ஏற்ற நீலநிற சில்க் புடைவையும், 'ஆர்கண்டி' வாயில் ரவிக்கையும் அவளைப் பூலோக ரம்பையாகச் செய்திருந்தது. பதில் பேசிவிட்டுக்

கையில் வைத்திருந்த 'பிளாஸ்டிக்' பை ஆட, காதுகளில் அணிந்திருந்த டோலக்குகள் குலுங்க அவள் அன்னநடை போட்டு ஹாலுக்கு வெளியே போகும்வரை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் ராமமூர்த்தி. அப்புறம் ஒரு பெருமூச்சு விட்டான்.

அந்த வருடம் முடிவில் நடக்கும் சங்கீத விழா பத்து நாட்களுக்கும் 'ரிஸர்வ்' செய்த அங்கத்தினர்களுக்கு இட வசதிகள் ஹாலில் செய்து கொடுக்கும் பொறுப்பு ராமமூர்த்தியின் தலையில் விழுந்திருந்தது. முதலில் அந்த வேலையை ஒத்துக்கொள்ள அவன் மறுத்தபோதிலும் சபாக் காரியதரிசி ரொம்பவும் கேட்டுக் கொண்டதன் பேரில் அதைச் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

முதல் நாள் கச்சேரிக்கு அவசர அவசரமாக 'ரிஸர்வ்' செய்த அங்கத்தினர்களுக்கெல்லாம் ஹாலில் மேடைக்கு முன்னால் போட்டிருந்த நாற்காலிகளில் சீட்டு எழுதிக் கட்டி 'ரிஸர்வ்' செய்துவிட்டுப் போய்விட்டார் காரியதரிசி. எந்தெந்த நபரின் இடம் எவ்வெவ்விடத்தில் இருக்கிறது என்ற ஒரு பட்டியல் தயாரிப்பது பெரிய கஷ்டமாய்ப் போய்விட்டது ராமமூர்த்திக்கு. இரண்டு மணி நேரம் அவகாசம் எடுத்துக்கொண்டு அந்த 'லிஸ்டை'த் தயார் செய்தான் அவன். அப்படி இருந்தும் இந்திராணியின் இடம் தவறி விழுந்துவிட்டது. ஆண்களுக்கு நடுவில் அவள் உட்கார வேண்டிய நிர்ப்பந்தம் வந்து விட்டது.

முதல்நாள் மாலை இந்திராணி கச்சேரிக்கு வந்தாள். சற்று முன்னதாகவே வந்துவிட்டாள். வழக்கத்திற்கு மாறாகவே தடபுடலாக 'டிரஸ்' பண்ணிக்கொண்டு வந்திருந்தாள். வலதுகையில் ஒரு டஜன் சிவப்பு வளையலுக்கு மத்தியில் ஐந்தாறு தங்க வளையல்கள் மின்னிக் கொண்டிருந்தன.

காதில் வைரத்தோட்டோடுகூட வைரத் தொங்கட்டான் ஊசலாடிக் கொண்டிருந்தது. கட்டுப் பூவும் தலையுமாய் அவள் ஹாலுக்குள் பிரவேசித்தபோது அங்கு அமர்ந் திருந்தவர்கள் அத்தனைபேர் கண்களும் அவள் பக்கம் திரும்பின.

ராமமூர்த்தி 'சட்'டென்று எழுந்திருந்து அவள் டிக்கெட்டைக் கேட்டு அவளுடைய இடத்தைச் சுட்டிக் காட்டினன்.

"தாங்க் யூ" என்று ஆங்கிலத்தில் வந்தனம் தெரி வித்துவிட்டு முகத்திலே புன்னகை தவழ எழிலாக நடந்து போய்த் தன்னுடைய இடத்திலே அமர்ந்தாள் அவள். அந்தச் சமயத்தில் அவள் பக்கத்திலிருந்த நாற்காலிகள் எல்லாம் காலியாய் இருந்தன. நேரம் ஆக ஆகத்தான் 'ரிஸர்வ்' செய்த ஸீட்டுகள் எல்லாம் நிரம்ப ஆரம்பித்தன. அன்றைய தினம் பாட்டுக் கச்சேரி. பாடகர் மேடை ஏறி வர்ணம் பாடிக்கொண்டிருந்தார். அப்போது கட்டையும் குட்டையுமாகப், பருத்த ஆசாமி ஒருவர் இந்திராணியின் நாற்காலியைத் தாண்டிக் கொண்டுபோய் அவள் அமர்ந் திருக்கும் நாற்காலிக்குப் பக்கத்து நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

அவர் அமர்ந்தவுடனேயே இந்திராணிக்கு அங்கு உட்கார அருவருப்பாக இருந்தது. அவருடைய முகத்தை இரண்டொரு தடவை பார்த்தபோது பயந்தேவிட்டாள். அவருடைய அடர்த்தியான மீசைதான் அவளுடைய பயத் திற்குக் காரணமாக இருக்கவேண்டும். அதோடுகூடப் பக்கத்திலுள்ளவர்களை அப்படியே உறிஞ்சிவிடுபவரைப் போல அவர் பொடிவேறு போட்டுக்கொண்டிருந்தார். மேலும் ஹாலே அதிர்ந்து விடும்படியாக அடிக்கடி தும்மிக்கொண்டிருந்தார்.

இவற்றையெல்லாம் வெகு பொறுமையோடு சகித்துக் கொண்டிருந்தாள் இந்திராணி. 'பணத்தையும் ஏராள மாகக் கொடுத்துவிட்டு இப்படிச் சங்கடமாகப் போய் விட்டதே! நிம்மதியாகக் கச்சேரி கேட்க முடியாது போல் இருக்கிறதே!' என்று மனத்துக்குள் நினைத்துக்கொண் டாள். 'இடத்தை மாற்ற எப்படியாவது ஏற்பாடு செய்துவிட வேண்டும்' என்று தீர்மானித்துக்கொண் டாள். அதனால்தான் போகும்போது ராமமூர்த்தியிடம் தன்னுடைய இடத்தை மாற்றிவிடும்படி கூறிவிட்டுப் போனாள்.

மறுநாள் நாட்டியக் கச்சேரி. ராமமூர்த்தி ஹாலுக்கு முன்னதாகவே வந்துவிட்டான். இந்திராணியின் இடத்தை எந்த இடத்திற்கு மாற்றலாம் என்று யோசனை செய்து கொண்டிருந்தான்.

"முதலாண்டான் செட்டியாரைத் தூக்கிவிட்டால், பக்கத்தில் ருத்திரகோடி இருக்கிறார். ரௌத்திராகாரமாகி விடுவார். அசைக்க முடியாது! ஜபாரைத் தூக்கிவிட்டு அங்குப் போட்டாலோ வனஜாட்சி அம்மாள் 'தொண தொண' என்று பேசிக்கொண்டிருப்பாள். இந்திராணி யைத் தூக்கி எங்குப் போடுவது? இந்துசேகர் பக்கத்தில் போடலாமா? அவனோ மைனர், பாட்டைக் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க மாட்டான்......" என்று தனக் குள்ளே யோசனை செய்துகொண்டே போனான். ஒன்றும் உருவாகப் புலப்படவில்லை. கடைசியில் காரியதரிசி வந்த வுடன் கேட்டுச் செய்துவிடலாம் என்று அவர் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

காரியதரிசி வந்தார்; கூடவே, அவரது சரிகை அங்க வஸ்திரமும் 'ஸெண்டு' வாசனையும் வந்தன. ராமமூர்த்தி

மெதுவாக இடம் மாற்றுதல் விஷயமாகப் பிரஸ்தாபித்தான்.

"இந்திராணியின் ஸீட் இருக்கிறதே அதோ, அதை மாற்றிவிட வேண்டுமாம். நேற்றே என்னிடம் சொல்லி விட்டுப் போனுள் அந்த அம்மாள்" என்று இழுத்தான் ராமமூர்த்தி.

"அடடா, இதெல்லாம் காதில் போட்டுக்கொள்ளாதே ராமு. இப்படித்தான் கேட்டுக்கொண்டிருப்பார்கள். 'சரி, சரி' என்று தலையைமட்டும் ஆட்டிவிடு" என்று கையையும் தலையையும் ஆட்டிக் கொண்டு சொன்னுர் காரியதரிசி. பிறகு அவசரமாக டெலிபோனில் யாரோ கூப்பிட்டதனுல் போய்விட்டார்.

ராமமூர்த்தி காரியதரிசியின்மேல் பழியைப் போட்டு விடலாம் என்று இந்திராணியின் இடத்தை மாற்ருமல் சும்மா இருந்துவிட்டான்.

நாழிகை ஆகிக்கொண்டு இருந்தது. ஒவ்வொருவராக வந்துகொண்டிருந்தனர்.

இந்திராணி வந்தாள். இன்று வேறு விதமாகத் தன்னை அலங்காரம் செய்துகொண்டிருந்தாள். தலையில் இரட்டைப் பின்னல் போட்டுக்கொண்டிருந்தாள். ஒரு பின்னலுக்கும் இன்னொரு பின்னலுக்கும் இடையில் கனகாம்பரப் பூவினுல் தலையில் அணைகட்டினுற்போல் பூச் சூடிக்கொண்டிருந்தாள். காதில் தோடும் தொங்கட்டானும் இல்லை. வைரத்தோடு மட்டும் இருந்தது. இடது கரத்தில் சிறிய கைக் கடிகாரமும் வலது கையில் ஒரே யொரு வைர வளையல் மட்டும் இருந்தது. வழக்கப்படி 'பிளாஸ்டிக்' பை வலக் கையில் தொங்கிக் கொண்டிருந்தது.

ராமமூர்த்தியைப் பார்த்தவுடன் லேசாகச் சிரித்துக் கொண்டாள். "என்னுடைய இடத்தை மாற்றிவிட்டீர்களா? என் தம்பி பாலு வந்திருக்கிறன். ஐந்து வயதுப் பையன்தான். மடியில் வேண்டுமானல் வைத்துக்கொள்கிறேன்" என்று சொல்லி அருகில் இருந்த பொடிப் பையனை அணைத்துக்கொண்டாள்.

ராமமூர்த்திக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. "குழந்தைக்கு வயது மூன்றுக்குமேல் இருந்தால் முழுக் கட்டணம் ஆயிற்றே! அப்படி யிருந்தும் 'கொசுறு' ஒன்றை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்களே. மேலும் உங்கள் இடத்தை வேறு மாற்றவில்லை. அங்கேயே போய் உட்காருங்கள்; பார்க்கலாம்" என்று சொன்னன்.

இந்திராணிக்குக் கோபம் கோபமாக வந்தது. "காரிய தரிசியிடம் பேசிக்கொள்கிறேன்" என்று கூறி விட்டுப் பழைய இடத்திலேயே வந்து உட்கார்ந்தாள். அன்று உட்காரும்போது தனது பக்கத்து ஸீட்டில் உட்காரும் தடித்த ஆசாமி யார், அவர் பெயர் என்ன என்பதைத் தெரிந்துகொள்வதற்காக, அந்த இடத்தில் பெயர் எழுதி இருக்கும் சீட்டைப் பார்த்தாள். 'ராஜாராம்' என்று எழுதி யிருந்தது. 'பெயருக்கும் உருவத்திற்கும் என்ன பொருத்தம்!' என்று நினைத்துக்கொண்டு தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டாள். பிறகு தன் தம்பி பாலுவை அந்தக் காலி நாற்காலியில் உட்கார வைத்தாள்.

அன்றைய தினம் கச்சேரி ஆரம்பித்து ஒரு மணி நேரம் கழித்துத்தான் அந்த இடத்திற்குரிய ஆசாமி வந்தார். அதுவரையில் பாலு அந்த இடத்தில் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தான்.

ஆனல் முந்திய தினம் இந்திராணி பார்த்ததுபோல் முரட்டு மனிதர் வரவில்லை. ஒரு வாலிபன் வந்தான்.

வெள்ளை நிஜாரும், மஞ்சள் நிற ஸில்க் ஷர்ட்டும், சிவப்பு 'டை'யும் அணிந்து. காலில் அணிந்துள்ள பூட்ஸ் 'கிர்கிர்' என்று சப்தமிடக் கம்பீரமாகத் தன்னிடத்திற்கு வந்தான். அவன் நோக்கி வந்த இடம் காலியாக இல்லை. அந்த இடத்தில் பாலு தூங்கிக் கொண்டிருந்தான்!

இந்திராணி அவனைப் பார்த்தவுடன் பரபரப்பு அடைந்தாள். அவள் முகம் 'குப்'பென்று சிவந்து விட்டது!

"இந்த இடம் உங்களுடையதா? குழந்தையை எடுத்துக்கொள்ளட்டுமா?" என்று அடக்கத்துடன் கேட்டாள்.

"வேண்டாம், வேண்டாம்! நான் போய்விடுகிறேன்" என்று பதில் சொல்லிவிட்டு அவன் வெளியே போய் விட்டான்.

அவன் போகும்வரையில் இந்திராணி அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். 'என்ன தாராள மனசு' என்று அவளை யறியாமலேயே அவள் வாய் முணு முணுத்தது.

அன்றைய நிகழ்ச்சி முடிந்தவுடன் இந்திராணி வெளி யில் போகும்போது ராமமூர்த்தி சொன்னான்: "நல்ல வேளை, இன்று அந்தத் தடித்த மனிதர் வரவில்லை. அவர் டிக்கெட்டில் வேறு ஒருவர் வந்திருந்தார்" என்று.

இந்திராணி பதில் ஒன்றும் பேசவே இல்லை. அரைத் தூக்கத்திலிருந்த தன் தம்பியின் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துச் சென்று வெளியில் தனக்காகக் காத்திருந்த காரில் போய் ஏறிக்கொண்டுவிட்டாள்.

அன்றைய தினம் நடனம் ரொம்பவும் நன்ருய் இருந்தது. இந்திராணியின் மனம் அதில் லயித்துப்போய்

இருந்தது. அவள் தம்பி பாலு விடாப்பிடியாய்ப் பிடிவாதம் செய்து அவளோடு வந்தான். ஆனல், அவன் நடனத்தைப் பார்க்கவே இல்லை. முக்கால்வாசி நேரமும் தூங்கிக் கொண்டிருந்தான் — அதுவும் வேருெருவர் உட்கார வேண்டிய நாற்காலியில்! அந்த வாலிபன் இங்கிதம் தெரிந்தவன். உட்காராமல் போய்விட்டான். மீசைக்காரராய் இருந்தால் இடத்தை விட்டிருக்க மாட்டார்; ஆக்ரமித்துக் கொண்டிருப்பார். அப்பொழுது எவ்வளவு சங்கடம்! மடியில் அல்லவோ சுமக்க வேண்டியிருந்திருக்கும். நிம்மதியாகக் கச்சேரியை ரஸித்திருக்க முடியாது என்று பலபடியாக யோசனை செய்துகொண்டு போனுள் இந்திராணி. அப்பொழுதெல்லாம் அந்த வாலிபனின் களையான முகம், அவள் மனத்திரையில் மின்னல் வேகத்தில் தோன்றித் தோன்றி மறைந்துகொண்டிருந்தது. இனி பாலு எவ்வளவு பிடிவாதம் பிடித்தாலும் கச்சேரிக்கு அழைத்து வரக்கூடாது என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டாள்.

மறு நாள் இந்திராணி சபா ஹாலுக்குள் நுழைந்த போது அவளுடைய இடத்திற்கு அடுத்தாற்போல் இருந்த இடத்தில் முன்னதாக வந்து அந்த வாலிபன் உட்கார்ந்து கொண்டிருந்தான். இந்திராணி பேசாமல் போய்த் தன்னுடைய இடத்தில் உட்கார்ந்துகொண்டாள்.

கச்சேரி ஆரம்பமாயிற்று. இந்திராணி தனது துடையில் மெதுவாகத் தாளம் போட்டுக்கொண்டிருந்தாள். இடை இடையே பக்கத்தில் அமர்ந்திருந்த வாலிபனைக் கடைக் கண்ணுல் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"இப்போது பாடிக் கொண்டிருக்கிருரே இது என்ன ராகம்?" என்று மெதுவாகக் கேட்டான் அவன்.

இந்திராணி ஒரு தடவை அவனைத் திரும்பிப் பார்த்தாள். பிறகு 'ஆனந்த பைரவி'' என்று சொன்னாள்.

"அடடா! இன்று மட்டும் அந்தக் குழந்தையை நீங்கள் அழைத்து வந்திருந்தால் இந்த ராகத்திற்கும் பாட்டுக்கும் நன்றாகத் தூங்கப் பண்ணி யிருக்கலாம்" என்று சொல்லிச் சிரித்தான்.

இந்திராணிக்குப் பதில் பேசத் தெரியவில்லை; 'கலீ' ரென்று சிரித்துவிட்டாள்.

இப்படி ஆரம்பமான இருவர் நட்பும் வளர்ந்து கொண்டு போயிற்று. அந்த வாலிபன் தன்னுடைய பெயர் ராஜாராம் என்றும், முதல் நாள் வந்தவர் தன்னுடைய தந்தை என்றும் சொன்னான். "தயவுசெய்து உங்கள் தந்தையை மட்டும் இனிக் கச்சேரிக்கு வரச் சொல்லாதீர்கள்" என்று வெகுதாழ்மையாகக் கேட்டுக்கொண்டாள் இந்திராணி.

'முதல் நாள் இடத்தை மாற்றச் சொன்னேமே. அவர் மாற்றாமல் இருந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று' என்று இப்போது நினைத்துக்கொண்டாள்.

பத்து நாள் நடந்த கலைவிழாக் கச்சேரிகள் முடிவடையும் தறுவாயில் இருந்தன. ராஜாராமும் இந்திராணியும் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிய வேண்டுமே என்று வெகுவாகத் தவித்துக்கொண்டிருந்தனர். நாலைந்து நாள் பழக்கத்தில் ஒருவர் குணம் ஒருவருக்கு நன்கு தெரிந்து விட்டபடியாலும் இருவர் உள்ளங்களும் ஒன்று பட்டுப் போயிருந்ததாலும் அவர்களிடையே பிரிவு ஏற்படும் போது மனம் கஷ்டப் பட்டதில் வியப்பொன்றுமில்லை யல்லவா?

முதல் நாளே இருவரும், கடைசி நாள் மேற்கொண்டு செய்ய வேண்டியவைகளைத் தீர்மானம் செய்துகொள்ள

லாம் என்று தீர்மானித்திருந்தனர். ஆகவே, அந்த நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். கடைசி நாள் வந்தது. ஆனால், எதிர்பார்த்தபடி இந்திராணி கடைசி நாள் சபா வுக்கு வர முடியவில்லை. அவளுடைய தந்தை அன்று நடக்க விருக்கும் புல்லாங்குழல் கச்சேரிக்குத் தான் போகப் போவதாக இந்திராணியின் டிக்கெட்டை எடுத் துக்கொண்டு போய்விட்டார். வெகு 'டீக்'காக டிரஸ் செய்து கொண்ட இந்திராணி தன் பையில் டிக்கெட்டு இல்லாததைப் பார்த்துத் திடுக்கிட்டாள். தாயாரை விசா ரித்தபோது அவள், "உன் அப்பா எடுத்துக்கொண்டு போயிருக்கார். தினமும்தான் நீபோய்க்கொண்டிருக்கயே, இன்னிக்கு அவர்தான் போகட்டுமே" என்று சொல்லி விட்டாள்.

இந்திராணியின் இருதயமே நின்றுவிடும் போலிருந் தது. திக்பிரமை அடைந்தவள்போல் காணப்பட்டாள். தன்னுடைய திட்டமெல்லாம் தவிடுபொடி ஆகிவிட்டதே என்று நினைத்துக்கொண்டாள். "ராஜாராம் தன்னைப் பற்றி என்ன நினைத்துக்கொள்வார். நான் போட்டது, பேசினது எல்லாம் வேஷமென்றுதானே எண்ணிக்கொள் வார்" என்று நினைத்தபோது அவள் உள்ளம் வெதும் பிற்று. கண்ணீர் மாலை மாலையாக வெளிவந்து கன்னங் களை நனைத்தது.

ஏறக்குறைய இந்தப் போராட்டத்தில் தான் ஈடுபட் டிருந்தான் ராஜாராமனும். அவனும் அன்றையக் கச் சேரிக்குப் போக முடியாமல் போய்விட்டது. அன்று காலை அவனுடைய தந்தை ஊரிலிருந்து திரும்பி வந்து விட்டார். வந்தவர் ராஜாராமிடமிருந்து முதல் காரிய மாக டிக்கெட்டைப் பெற்றுக்கொண்டு சபாவுக்கு வந்து விட்டார்.

ராஜாராமனுக்குத் தன்னுடைய தந்தையின் செய்கை மீது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. 'கிழம் கட்டைகளுக்கு எல்லாம் கச்சேரி என்ன வேண்டிக் கிடக்கிறது?' என்று மனமாரச் சபித்தான். 'தனியாக டிக்கெட்டு வாங்கிச் சென்றாலும் இந்திராணியின் பக்கத்தில் உட்கார முடியாது. அவளுடைய விலாசத்தைக்கூடக் கேட்டு வாங்கிக் கொள்ளாமல் இருந்து விட்டோமே' என்று மண்டையில் அடித்துக்கொண்டான் ராஜாராமன்.

ராஜாராமனுடைய தந்தை உமாபதி முதலியார் 'ஜம்' மென்று தம் இடத்தில் வந்து உட்கார்ந்துகொண்டார். அவர் பக்கத்து இடத்தில் சற்று நேரம் கழித்து இந்திராணியின் தந்தை ராஜாபாதர் முதலியார் வந்தார்.

உமாபதி, ராஜாபாதரைப் பார்த்துவிட்டார். "என்ன ராஜாபாதர் சௌக்கியமா? பார்த்து ரொம்ப நாளாயிற்று. நீதான் கச்சேரிக்குத் தினம் வந்து கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டார்.

"அடடா, உமாபதியா! சௌக்கியமா? இன்னிக்குத் தான் வரேன். நீ தினமும் வருகிறாயா?"

"இல்லே, என் மகன் வந்துகொண்டிருக்கிறான். நீ தினம் வராப்போல் இருக்கு. முதல் நாள் தான் உன் பெண்ணைப் பார்த்தேன்."

"நான் வருவதில்லே. என் மூத்த பெண் வந்துகொண்டிருக்கா. அவள் பேரிலேதான் 'ரிஸர்வ்' ஆகியிருக்கு."

இதற்குள் பக்கத்தில் 'உஸ் உஸ்' என்று சத்தம் கேட்கவே பழைய நண்பர்கள் இருவரும் பேச்சை நிறுத்திக் கொண்டுவிட்டார்கள். கச்சேரி முடியும்வரை அவர்கள் பேசவே இல்லே முடிந்தவுடன் ஒருவருக்கொருவர் வந்தனம் தெரிவித்துவிட்டுப் பிரிந்தார்கள்.

உமாபதி தன் பங்களாவை அடைந்தவுடன் ராஜாராமான் தன் முகத்தை 'உர்' என்று வைத்துக் கொண்டிருந்தான். தன் தந்தையைப் பார்த்தவுடன், "என்ன அப்பா, கச்சேரி ரொம்ப நன்ருக இருந்ததா? உங்க வலக்கை பக்கத்தில் யார் உட்கார்ந்திருந்தா?" என்று கேட்டான்.

"திருட்டுப் பயலே, எல்லாம் தெரியும்! விஷயம் அவ்வளவு தூரத்துக்கு முற்றிவிட்டதா? முதலிலே இதுக்கு ஏதாவது ஒரு வழி பண்ணுகிறேன்" என்று சொல்லிக் கனைத்துக் கொண்டார்.

மறுநாள் விடிந்தவுடன் காரைப் போட்டுக்கொண்டு ராஜாபாதர் வீட்டுக்குக் கிளம்பினர். கார் மயிலாப்பூர் 'லஸ்' முனைக்கு வந்தது. லஸ் முனையில் நிற்கும் போலீஸ்காரரின் கை சமிக்ஞைக்காக எதிரில் காத்திருந்த காரிலிருந்து கை தட்டும் சப்தம் கேட்டது. அதில் ராஜாபாதர் உட்கார்ந்திருந்தார். பிறகு இரு 'கார்'களும் ஜோடியாக ராஜாபாதர் வீட்டை அடைந்தன.

"என்ன உமாபதி! நான் உன்னைத் தேடிக்கொண்டு கிளம்பினல் நீ என்னைத் தேடிக்கொண்டு வருகிருயே?" என்ருர் ராஜாபாதர்.

"இரண்டு பேர் கிளம்பின காரியமும் ஒன்ருக இருக்கும் என்று நினைக்கிறேன். நேற்றுக் கச்சேரியிலிருந்து வந்த வுடனே என் மகன் உயிரை எடுத்துவிட்டான்."

"இவளும் அப்படித்தான். கச்சேரிக்கு 'யார் வந்தா? உன் பக்கத்திலே யாரு உட்கார்ந்தா?' இப்படித் தொணதொணன்னு கேள்விகளைக் கேட்டு உயிரை வாங்கிட்டா. கடைசியிலேதான் விஷயம் புரிந்தது."

"ஏதோ நாம் தூரமாக இருந்தவர்கள் இப்போது நெருங்கி விட்டோம்" என்று சாந்தமாகச் சொல்லிச் சிரித்துக் கொண்டார் உமாபதி.

நல்ல சுபயோக சுபவேளையில் ராஜாராமனுக்கும் இந்திராணிக்கும் கல்யாணம் விமரிசையாக நடந்தேறியது.

முதல் அழைப்பிதழ், சங்கீத விழாவின்போது சபாவில் இடங்கள் எல்லாம் 'ரிஸர்வ்' செய்து அதைக் கடைசி வரை மாற்றுமல் இருந்த திருவாளர் ராமமூர்த்திக்குப் போயிற்று.

கல்யாணத்திற்கு அவன் வந்திருந்தபோது முதல் தாம்பூலம் அவனுக்குத்தான் வழங்கப்பட்டது. கல்யாணம் முடிந்து அவன் விடை பெற்றுக்கொண்டபோது ராஜாராமனும் இந்திராணியும் வாசல்வரை வந்து அவனை வழி அனுப்பினார்கள்.

"அடுத்த வருஷம் கவலையில்லை; 'இந்திராணி ராஜாராம்' என்று சேர்ந்தாற்போல் இரண்டு 'ஸீட் ரிஸர்வ்' செய்து விடுகிறேன்" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டான் ராமமூர்த்தி.

அவனுடைய தூய அன்பில் மெய்ம்மறந்து போனார்கள் இந்திராணியும் ராஜாராமும்.

கும். தன்னை யறியாமல் தன் உள்ளமும் மனமும் அவனை நாடுவதை உணரும் போதெல்லாம் அவன் உடல் நிறைவு கண்டு பூரித்துப் போகும். இது ஏன், எதனால் என்றுதான் அவனால் இதுவரை ஊகித்து அறிய முடியவில்லை. அன்றைய தினம் வெள்ளிக்கிழமை. ஒரு நாயனாருக்கு விசேஷ பூஜை என்று குருக்கள் அறிவித்திருந்தார். சாதாரணமாக நாயன்மார்கள் என்றால் மேளம் வாசிப்பவர்களுக்கு வெகு அலட்சியம். மேளம் கொட்ட வர மாட்டார்கள். அன்றைய தினம் அந்த நாயனாருக்கு அதிர்ஷ்டம் போலும்! வேதாசலம் நாகசுரத்தை எடுத்துக் கொண்டு கோயிலுக்கு வந்து விட்டான். நாகசுரம் மட்டும் வந்தால் போதுமா? ஒத்து ஊதுபவர் வரவில்லை. தவுலையும் காணோம். குருக்கள் வேதாசலத்தைப் பார்த்து, "என்ன வேதாசலம் இன்று மழைதான் வரப்போகிறது? நீயே வந்து விட்டாயே! ஆனால் வந்து என்ன பிரயோசனம்? தவுல்காரர் வந்தால் தானே?" என்று கேட்டுவிட்டு, பரிகாசமாக ஒரு சிரிப்புச் சிரித்து வைத்தார். வேதாசலத்துக்கு அவர் சிரிப்பு நெருப்பாக இருந்தது. "என்ன சாமி! தவுல் இல்லாவிட்டால் என் பாட்டு எடுக்காதா? அப்படி தவுல் வேண்டும் என்றால் கொட்டிகிட்டு வாசிக்கிறேன்" என்றான் ஆத்திரத்தோடு.

"கோவிச்சுக்காதே, அப்பா! நீ அஷ்டாவதானம் செய்வாய் என்று எனக்கு எப்படித் தெரியும்?" என்று குருக்கள் சொல்லிவிட்டுக் கர்ப்பக்கிரஹத்துக்குள் சென்று விட்டார்.

வேதாசலம் நிஜமாகவே அஷ்டாவதானம்தான் செய்தான். மூலையில் மூடிக் கிடந்த தவுலை எடுத்துக் கீழே வைத்து, அதன் முன்பு உட்கார்ந்து கொண்டான். பிறகு நாகசுரத்தை அதன்மேல் கிடத்தி ஊத ஆரம்பித்துவிட்

டான். ஒரே சுரத்தில் நாகசுரம் அலற, அதற்கு ஏற்ற மாதிரி அவனுடைய வலது கை தவுலை 'டும்டும்' என்று தட்ட இடது கை 'ஜாலரா'வைச் சுருதிக்கு ஏற்றபடி இனிமையாகத் தட்டிக் கொண்டிருந்தது.

நாகசுர சத்தம் திடுமென்று கேட்கவே, பிராகாரத்தில் விளக்குகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்த பூங்கொடி சன்னிதிப் பக்கம் வந்து வெளியே எட்டிப் பார்த்தாள். வேதாசலம் ஒருவனே மூன்று வாத்தியங்களை வாசிப்பதைக் கண்டு 'களுக்' கென்று சிரித்து விட்டாள். சிரித்த பிறகு தான் நாணம் அவளைக் கவ்விக் கொண்டது. தான் சிரித்து விட்டதை வேதாசலம் கவனித்து விட்டான் என்பதை அவள் அறிந்தபோது, அது பன்மடங்கு பெருகி நின்று அவள் சரீரத்தைச் சிறுக வைத்துவிட்டது.

பூங்கொடி கோயிலில்தான் இருக்கிறாள் என்பதை வேதாசலம் அறிந்தபோது அவன் குதூகலம் பெருகிற்று. தவுலை வெகு வேகமாகக் கொட்ட ஆரம்பித்து விட்டான். கெட்டி மேளம் கொட்டவேண்டும் என்று அவன் பிரம்மப் பிரயத்தனம் செய்து பார்த்தான். எவ்வளவு முயன்றும் அது சாத்திய மாகாமல் போய் விட்டது

வேதாசலம் காலை வேளையில் நாகசுரம் ஊத வந்ததின் காரணமே பூங்கொடியைச் சந்திக்கவேண்டும் என்பதற் காகத்தான். அவள் வந்திருப்பது ஊர்ஜிதமானவுடன் எப்படியும் அவளுடன் இன்று பேசிவிட வேண்டும் என்று தன்னுள் தீர்மானம் செய்து கொண்டான்.

பூங்கொடி கைக் காரியங்கள் யாவையும் முடித்து விட்டு, சுவாமியைத் தொழச் சன்னிதிப்பக்கம் வந்தாள். கடவுளைக் கவனித்தவளின் கண்கள் வேதாசலத்தைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டன. குருக்கள் திருநீறை

அள்ளிப் பூங்கொடியின் கைகளில் கொடுத்துவிட்டு மடப் பள்ளிபக்கம் சென்றுவிட்டார். பூங்கொடி சற்றுத் தயங் கியபடியே வெளிப்பக்கம் வந்தாள்.

"இந்தா, இந்தப்பக்கம் பாரு, உன்னோடு பேசவேண் டும் என்றுதான் இத்தனை நேரம் காத்துக்கிட்டு கிடக் கிறேன்" என்றான் வேதாசலம், அவள் வந்த வழிப்பக்கம் நின்றுகொண்டு.

பூங்கொடிக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. திடீ ரென்று வேதாசலம் பேச்சை ஆரம்பித்தவுடன் அவளுக்கு ஒரேயடியாகத் தன்னை யாரோ தூக்கி எடுத்துப் போடுவ தைப்போல் இருந்தது. இருந்தாலும் ஒருவாறு சாமாளித் துக்கொண்டாள். வேதாசலத்திடம் அவளை யறியாமல் அவளுக்கொரு நன்றி யிருந்தது. அது அவன் வாசிக்கும் நாகசுர இசையின் காரணமாக இருக்கலாம். எனவே அவன் பேச்சுக் கொடுக்கும்போது அவளால் பதிலளிக்கா மல் இருக்க முடியவில்லை.

"என்னிடம் பேசக் காத்துக்கிட்டு கிடப்பானேன்? பூங்கொடி என்று ஒரு குரல் கூப்பிட்டா, நானே ஓடி வரேன்" என்றாள் பணிவாக.

"அட, உன் பேரு பூங்கொடியா? பேரு ரொம்ப நல்லா தான் இருக்கு. பேரு தெரிந்திருந்தால் நான் அப்போதே கூப்பிட்டிருப்பேன்" என்று சொல்லிவிட்டுப் பல்லைக் காட்டினான் வேதாசலம். "அதற்கு நான் என்ன செய் வேன்!" என்று 'வெடுக்'கென்று பதிலளித்து நாணிக் கோணிக்கொண்டு நின்றாள் பூங்கொடி.

"பூங்கொடி நான் பேச வரேன் என்று உனக்குக் கோபமா? ரொம்ப நாளாக ஒரு விசயம் உன்னைக் கேக்கணும்னு துடிச்சுக்கிட்டு இருக்கேன். நான் கேட்

டால் அதை நீ சொல்லவா போகிறாய்?" என்று பரிதாப மான குரலில் கேட்டான் வேதாசலம்.

"ஏன் இப்படிப் புதிர் போடுகிறாய்? இந்த ஆண் பிள்ளைங்களே இப்படித்தான் சுத்திச் சுழட்டிக்கிட்டு..."

"பூங்கொடி, பூங்கொடி! கோவிச்சுக்காதே! கேட்டுப் பிடறேன். நீ வந்து, தினமும் கோயிலுக்கு வறையா..."

"வறேன்..."

"வந்து என்ன செய்யறே...?"

"சாமி, கும்பிடறேன்..."

"இல்லை, பொய் புளுகறே..."

"பின்னே என்ன செய்யறேனும்?"

"நிதம் நீ கோவிலுக்கு வந்து அழுவலே!"

"அடபாவி, உனக்கு எப்படி இது தெரியும்?" என்று கேட்கவேண்டும் போல இருந்தது பூங்கொடிக்கு. ஆனால் அவள் அப்படிக் கேட்கவில்லை.

"என்ன பூங்கொடி! சும்மா இருக்கே. நான் சொல் கிறது நிசம்தானே?" என்று மீண்டும் கேட்டான் வேதா சலம்.

பூங்கொடிக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. ஆனால் அவள் கண்கள் வேதாசலத்துடன் பேசின. இமைகள் அர்த்த பாவத்துடன் மூடித்திறந்தன. கண்ணீர் மாலை மாலையாகக் கன்னங்களில் வழிந்தோடியது.

"பூங்கொடி! உனக்கு இஷ்டம் இல்லாவிட்டால், சொல்ல வேண்டாம். தினமும் கெட்டிமேளம் கொட்டும் போது நீ உள்ளம் குமுறி அழுவதைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை. அதனாலேதான் கேட்டேன். உன் வருத் தத்தை என்னால் போக்க முடியுமானால் அதற்கான ஒத்

தாசை செய்யலாம் என்று நினைச்சிருக்கேன். உனக்கு மனசு இல்லாவிட்டால்...'' பேச்சை முடிக்க முடியாமல் தயங்கினுன் வேதாசலம்.

''உங்க மனசு நல்ல மனசு, எல்லாருமா இப்படிக் கேட்கிருங்க. நான் அழுவதற்கு எவ்வளவோ காரணம். உங்களாலே அதை ஒருநாளும் தீர்க்கமுடியாது. இருந்தாலும் உள்ளுணர்வு என்னமோ சொல்லுது, உங்ககிட்டே எல்லாத்தையும் சொல்லணும்னு, அதனுலே சொல்றேன்...'' என்று கூறிக்கொண்டே கண்களைத் துடைத்துவிட்டுக்கொண்டாள் பூங்கொடி.

ராதா மங்கலம் கிவளூருக்குப் பக்கத்தில் இருக்கும் ஒரு சிறிய கிராமம். அங்கு 'உடையவர்கள்' அதிகமாகக் கிடையாது. இருப்பவர்கள் அவ்வளவு பேரும் வேளாண்மை செய்பவர்கள். அங்குதான் பூங்கொடி பிறந்தாள். வயது ஆக ஆகத்தான் சௌந்தர்யம் அவளைத் தேடி வந்தடைந்தது. இயற்கையின் எழிலில் மிளிர்ந்து பொன் வண்ணம் கொண்டு அவள் அந்தக் கிராமத்தில் ஒரு தேவதையைப்போல உலவி வந்து கொண்டிருந்தாள். அந்தக் கிராமத்தின் வடக்குக்கோடியில் ஒரு கோயில் இருந்ததாம். அந்தக் கோயிலிலுள்ள அம்மனுக்குச் சௌந்தர்யவல்லி என்று பெயர். கால வெள்ளத்தில் இப்போது கோயிலைக் காணும்; அம்மனையும் காணும். அதற்கு அடையாளமாக மதிள் சுவரும், அம்மன் பெயரும் மட்டும் நிலைத்து விட்டன. அந்த அம்மன்தான் ஜீவன் எடுத்துப் பூங்கொடியாகிவிட்டாள் என்று கிராமத்திலுள்ள பலருடைய அபிப்பிராயம். அது எவ்வளவு தூரம் உண்மையோ? ஆனுல், அந்த ஊர் இளைஞர்கள் அவ்வளவு பேரும், சௌந்தர்யவல்லி அம்மனைப் பார்த்திராவிட்டாலும் நூற்றுக்கு நூறுபங்கு இதை ஒத்துக்கொள்வார்கள்.

பூங்கொடி பூத்துச் செழித்து மலர்ந்தபோது அவளைச் சுற்றிப் பல ஆண் வண்டுகள் வட்டமிட்டன. ஆனால் அவளை நெருங்கவோ அவள் இதயத்தைக் கவரவோ செல்லப்பனால்தான் முடிந்தது. ஏனெனில் அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருந்தது.

செல்லப்பனுக்குத் தாயுமில்லை, தகப்பனுமில்லை; ஒண்டிக்கட்டை, ஆனால், அவன் கைகளில் வலுவிருந்தது. உள்ளத்தில் உறுதியிருந்தது. பூமியை நம்பி வாழ்ந்த அவன் யாருக்கும் பயப்படவில்லை. பூர்வீகமாக இருந்த கொஞ்சம் நஞ்சையோடு, குத்தகைக்குவேறு எடுத்துக் கொண்டிருந்தான். பயிர்த்தொழில் மகோன்னதமாக இருந்த காலத்தில் அவன் ஒரு குறைவு மில்லாமல் கவலையற்று வாழ்க்கை நடத்தி வந்தான். அந்த நிலையில்தான் பூங்கொடி அவன் அந்தரங்கத்தில் நிரந்தரமாகக் குடியேறினாள்.

பூங்கொடியின் வீட்டுக்கு எதிரேதான் செல்லப்பன் வீடும் இருந்தது. எனவே, அவர்கள் காதல் வளரச் சூழ்நிலையும் அனுசரணையாக அமைந்திருந்தது. செல்லப்பன் வீட்டை விட்டு வயல் வெளிகளுக்குப் போகும்போதும், மாலைவேளைகளில் வீடு திரும்பும்போதும், பூங்கொடி தவறாமல் தன் வீட்டின் ஆளோடியில் நின்றுகொண்டு அவனுக்குக் காட்சி தருவாள். செல்லப்பன் அவள் கடைக்கண் வீழ்ச்சியினால் தாக்குண்டு, மதுவுண்ட வண்டைப் போல் ரீங்கரித்துச் சொக்கிப் போவான். பூங்கொடியின் பெற்றோர்களுக்கு இவ்விஷயங்கள் யாவும் தெரிந்துதான் இருந்தன. இச்சமயத்தில்தான் எதிர்பாராத நிகழ்ச்சி நடந்தது.

செல்லப்பன் பாடுபட்டு உழைத்ததன் பயனாக அவனுடைய சொந்த நிலமும், குத்தகை எடுத்துக்கொண்ட

நிலமும் எப்போதும் போல அந்த வருடமும் நன்கு விளைந்திருந்தது. ஆனால், அதற்குமாறாக மற்றக் குடியானவர்களின் நிலங்களில் விளைச்சல் பாதிக்குப் பாதிகூடக் காணவில்லை. எனவே, அந்தப் பிராந்தியத்தில் உள்ளவர்கள் எல்லோரும், குத்தகைப்படி நெல் அளக்க முடியாது என்று பெரும் கிளர்ச்சி செய்தார்கள். இந்தக் கிளர்ச்சியில் செல்லப்பன் சம்பந்தப்படவில்லை. ஆனாலும், அவன் பெயர் அடிபட்டது. வாயளவில் இருந்த இந்தக் கிளர்ச்சி ஒரு நாள் கைகலப்பில் வந்துவிட்டது. நாலைந்து மிராசுதார்கள், 'குத்தகைப்படி நெல் அளக்க வேண்டும்' என்று கெடுபிடி செய்தபோது, பண்ணையாட்கள் அவர்களை நையப் புடைத்துவிட்டார்கள். பிறகு இந்த நிலவரம் போலீஸுக்கு எட்டிவிட்டது. உள்ளூர் 'அவுட்போஸ்ட்' ஏட்டும், ஸப் இன்ஸ்பெக்டர் நமசிவாயமும் ராதாமங்கல கிராமத்துக்கு விசாரணை செய்ய வந்துவிட்டார்கள்.

கேஸ் புலன் விசாரணை நான்கு நாட்கள் நடந்தன. கடைசியில் செல்லப்பன் உள்பட நான்கு பேர்கள் கைது செய்யப்பட்டார்கள்.

பூங்கொடிக்குச் 'செல்லப்பன் கைது செய்யப் பட்டான்' என்ற விவரம் தெரிந்த போது மூர்ச்சைப் போட்டு விழுந்துவிட்டாள். 'நான்கு நாட்களில் தன் தகப்பன் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யப்போகிறன், அதற்குள் இம்மாதிரி காரியம் ஒன்று நடந்துவிட்டதே' என்று நினைத்தபோது அவள் தொண்டை அடைப்பட்டுக் கண்களில் கண்ணீர் மாலை மாலையாக வந்தது

அன்று மாலை வீடு திரும்பிய பூங்கொடியின் தகப்பன் ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டே கயிற்றுக் கட்டிலில் அமர்ந்தான். "ஐயனார்தான் காப்பாத்தினர். பூங்கொடியைச் செல்லப்பனுக்குக் கட்டிக் கொடுத்திருந்தோமானல்

அந்தப் பெண் கண்கலங்கி நிற்கிறதைத்தான் பார்க்க வேண்டியதாக இருந்திருக்கும்'' என்று அவன் வாய் முணு முணுத்தபோது அவன் மனைவியும், ''சாமி எப்போதும் நம்ம பக்கம்தான்'' என்று அதை ஆமோதித்தாள். பூங் கொடிக்கு அவர்கள் சம்பாஷணையைக் கேட்கவே வேம்பாக இருந்தது. 'தெய்வமே' என்று தன் கைகளில் முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மினுள் அவள்.

செல்லப்பனை நாகைப்பட்டினம் 'ரிமாண்டி'ல் வைத்து விட்ட பிறகு ஒரு தகவலும் ராதாமங்கலத்துக்கு வர வில்லை. உற்றுர் உறவினர் அவனுக்கு யாரும் இல்லாத காரணத்தினுல் அவனைப்பற்றி ஒருவரும் கவலைப்பட வில்லை. ஆனுல், பூங்கொடி மட்டும் அவனைப் பற்றிக் கவலைப்பட்டாள். 'அவருக்கு ஓர் ஆபத்தும் நேராமல் சீக்கிரமே விடுதலையடைந்து ஊருக்குத் திரும்பி வந்து தன் கைப் பற்ற வேண்டும்' என்று தெய்வங்களை யெல்லாம் வேண்டிக்கொண்டாள்.

பூங்கொடியின் தகப்பனுக்குப் பொறுமையில்லை. தன் பெண் கண்ணீரும் கம்பலையுமாக நின்றுகொண்டிருப்பதை அவனுல் பார்க்க முடியவில்லை.

''பூங்கொடி! இப்படி நீ தினமும் அழுதுகொண் டிருந்தால், செல்லப்பன் வந்து விடுவாஞ? அப்படி வந்து விட்டாலும், நீ அவனை இனிக் கல்யாணம் செய்துகொள்ள முடியுமா?'' என்றுன்.

தன் தகப்பனின் பேச்சு பூங்கொடியின் துக்கத்தைத் தான் அதிகரிக்கச் செய்தது. அவள் பதில் பேசவே இல்லை. அதற்குப் பதிலாக அவளுடைய கண்ணீரும், உதடுகளும் துடி துடித்துக்கொண்டு ஆயிரம் ஆயிரம் பேசின.

ஒரு வெள்ளிக்கிழமை, பூங்கொடியின் தகப்பன் யாரையோ வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தான். வந்

தவன் தலையில் கொண்டை போட்டுக்கொண்டிருந்தான். நெற்றியில் காலணு அளவு குங்குமம் இருந்தது. ஏதேதோ பேசிக்கொண்டிருந்து விட்டுக் கடைசியில் அவன் தன்னிட மிருந்த தேங்காய், பூ, பழம் எல்லாவற்றையும் ஒரு தட்டில் வைத்துப் பூங்கொடியின் தகப்பனிடம் கொடுத்தான். அதற்குப் பிறகு பூங்கொடி அவனைக் கும்பிட்டுவிட்டுப் போனாள்.

பூங்கொடிக்குத் தனக்கு மணப்பேச்சு நடக்கிறது, அதற்குப் பரிசம் போட யாரோ வந்திருக்கிறார், தன் தகப்பனும் அதற்குச் சம்மதித்துவிட்டான் என்று தெரிந்து விட்டது. அதை ஊர்ஜிதம் செய்வதைப் போல் அவள் தகப்பன் விஷயத்தைப் பூங்கொடியிடம் சொல்லி விட்டான், "பூங்கொடி, வர வெள்ளிக்கிழமை உனக்குக் கண்ணாலம் நிச்சயம் ஆகிவிட்டது. இன்னிக்கு வந்தாரு பாரு, அவர்தான் உன் மாமனார், பிள்ளையினுடைய தகப்பன்" என்றான்.

கல்யாண தினம் நெருங்கி வரவரப் பூங்கொடியின் தேகம் நிலைகொள்ளாமல் தவித்தது.

கடைசியில் பூங்கொடியின் உள்ளம் உறுதியடைந்தது. அவளுக்கு இந்தத் திருமணத்தில் கொஞ்சங்கூட இஷ்ட மில்லை. எப்படியாவது இதிலிருந்து விடுதலை யடைவேண் டும் என்று தீர்மானித்துவிட்டாள். அதற்கான திட்டம் ஒன்றும் அவள் உள்ளத்தில் உருப்பெற்றுவிட்டது.

கல்யாணத்துக்கு முன் தினம், நடு நிசியில் பூங்கொடி விழித்துக்கொண்டாள். விடிந்தால் தன்னைப் பந்தலுக்கு இழுத்துக்கொண்டு போய்விடுவார்கள் என்று அவளுக்குத் தெரியும். எனவே, ஒருவரும் அறியாமல் வீட்டை விட்டு வெளியேறி விட்டாள். ஒருவர் கண்களிலும் படாமல்

சாலையைத் தாண்டித் தோப்புக்குள் மறைவதற்குள் அவள் பாடு பெருங் கஷ்டமாகப்போய்விட்டது. எவ்வளவு வேகமாக நடந்து வந்த போதிலும், கீவளூர் ஸ்டேஷனை வந்தடைந்த போது விடியும் நேரமாகிவிட்டது.

ஸ்டேஷனை அடைந்த பூங்கொடி மேற்கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் தத்தளித்துப் போனாள். கீவளூருக்குப் பக்கத்தில் சிக்கில் இருக்கிறது. அந்தச் சிக்கில் சிங்கார வேலர் எல்லோருடைய கஷ்டங்களையும் நொடிப்பொழுதில் தீர்த்துவைப்பார் என்று பூங்கொடியின் தாயார் அடிக்கடி அவளிடம் சொல்லி இருக்கிறாள். இப்போது பூங்கொடிக்குச் சிங்கார வேலர் ஞாபகம்தான் வந்தது. அந்த எண்ணம் தோன்றிய உடனேயே அவள் கரங்கள் குவிந்தன. "வேலவா! இனி நீதான் எனக்குக் கதி" என்று அலறினாள்.

இப்படி ஒன்றும் புரியாமல் பூங்கொடி நின்றுகொண்டிருந்த சமயத்தில்தான் யாரோ 'பூங்கொடி' என்று தன் பெயர் சொல்லி அழைப்பது அவள் செவிகளில் விழுந்தது. பயத்துடனும் நடுக்கத்துடனும் பூங்கொடி திரும்பிப் பார்த்தபோது அவள் கண்களை அவளாலே நம்ப முடியவில்லை. செல்லப்பன், பூங்கொடியை நோக்கி வேகமாக நடந்துவந்து கொண்டிருந்தான். பூங்கொடிக்கு ஒரே திக்பிரமை. தான் வேண்டிக்கொண்ட சிங்கார வேலர்தான் செல்லப்பன் உருக்கொண்டுவந்து விட்டாரோ என்று அவளுக்குத் தோன்றிற்று.

"பூங்கொடி! இந்த வேளையில் எங்கிருந்து இங்கு வந்தாய்?" என்றான் செல்லப்பன்.

"நீங்க எங்கே வந்தீங்க? உங்களைத்தான் ஜெயிலில் அடைச்சதாகப் பேசிண்டாங்களே!"

"ஆமாம்; ஜெயிலில்தான் இருந்தேன். என்மீது குற்றம் ஒன்றும் இல்லை என்று விடுதலை செய்துட்டாங்க' என்று கூறினுன் செல்லப்பன்.

"அவங்க நல்லா இருப்பாங்க, இப்போ மட்டும் நீங்க வராதபோனுல் என்பாடு அதோகதிதான். இனிப் பய மில்லை" என்று சொல்லிக்கொண்டே பெருமூச்சு விட்டாள் பூங்கொடி.

"உனக்கு என்ன ஆபத்து பூங்கொடி?" என்று பதட்டத்துடன் கேட்டான் செல்லப்பன்.

"ஆபத்தா, என்னை இன்னெருத்தனுக்குக் கட்டிக் கொடுக்கல்லவோ பாத்தாங்க. நீங்க மட்டும் இப்போ வராவிட்டால்..." பேச்சை முடிக்காமல் கண்ணீர் விட்டாள் பூங்கொடி.

"உனக்குக் கண்ணுலமா? எப்போ?"

"இன்னிக்குத்தான். அதனுலேதான் ஓடிவந்து விட்டேன்!" என்றுள் பூங்கொடி.

செல்லப்பனுக்குப் பூங்கொடியின் வார்த்தைகளைக் கேட்டவுடன் ஆத்திரம் மண்டிக்கொண்டு வந்தது. "பூங்கொடி, நம்ம குல கௌரவத்தையே கெடுத்து விட்டாயேடி. பாவி!" என்று தன்னையும் அறியாமல் கத்தி விட்டான். பூங்கொடி திகைத்துப்போனுள்.

"பூங்கொடி, கல்யாணம் நிச்சயம் செய்த பிறகு இப்படி ஓடி வரதுதான் நியாயமா? வா, ஊருக்குப் போவோம்."

பூங்கொடிக்குத் தன் தலையில் இடிவிழுவதைப் போன்ற பிரமை ஏற்பட்டது. செல்லப்பனு இப்படிப் பேசுகிறுன்? அவளால் நம்ப முடியவே இல்லை. "செல்லா,

உன்னையே நம்பியிருந்த என்க்கு நீ செய்கிற உபகாரம் இதுதானு? நம் இரண்டு பேரையும் கிராமத்திலே பார்த்தால் அப்படியே வெட்டிப் போட்டுடுவாங்க" என்று பலவாருகச் சொல்லி அவன் மனத்தைத் திருப்பப் பார்த்தாள். ஆனுல், செல்லப்பனுடைய உறுதி சிறிதும் தளரவே இல்லை.

விடிய ஒரு நாழிகை இருக்கும்போது, செல்லப்பனும் பூங்கொடியும் கிராமத்தை யடைந்தார்கள். ஆனுல், ஊர்க்காரர் சிலருக்குப் பூங்கொடி காணுதுபோன விவரம் தெரிந்துவிட்டது. அவளைத் தேடிக்கொண்டு நானு பக்கங்களிலும் ஆட்கள் சென்றனர். கல்யாணப் பந்தலில் மேளம் முழங்கிக்கொண்டிருந்தது. அப்போது கிராமக்காரர்கள் கையில் செல்லப்பன் சிக்குண்டான்.

செல்லப்பனைப் பிடித்துக்கொண்டு எல்லோருமே நையப் புடைத்துவிட்டார்கள். செல்லப்பன் கரடியாகக் கத்திப் பார்த்தான். அதெல்லாம் அவர்கள் காதுகளில் விழுந்தால்தானே?

கல்யாணப் பந்தலில் மேளம் முழங்கியபோது, செல்லப்பன் மூர்ச்சையற்றுக் கிடந்தான்.

இதற்குள் காதும் காதுமாக இருந்த இரகசியம் பகிரங்கமாகிவிட்டது. கல்யாணமும் நின்றுவிட்டது.

செல்லப்பன் ஆஸ்பத்திரியில் முனகிக்கொண்டிருந்தான். அடிக்கொரு தடவை நினைவு வந்த போதெல்லாம் "பூங்கொடிக்குக் கல்யாணமாகிவிட்டதா?" என்று கேட்டுக்கொண்டிருந்தான். ஒரு நாள் பூங்கொடியே அவனைப் பார்க்க ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தாள். அன்று அவன் தேகநிலைமை ரொம்பவும் மோசமாக இருந்தது. எனினும், பூங்கொடியைக் கண்டவுடன் அவன் தெளிவாகப் பேசி

ஞன். "பூங்கொடி, உன் கல்யாணம் நின்னு போச்சாம். எனக்கு என்ன ஆசை தெரியுமா? நீ உன் தகப்பனுர் பார்த்த பையனையே கண்ணுலம் கட்டிக்கணும். தெரிந்ததா; அந்தப்பையன் கிட்டேகூடச் சொல்லியிருந்தேன்..." அதற்கு மேலே ஏதோ பேச வாயெடுத்தான் செல்லப்பன், அவனுல் ஒன்றும் பேச முடியவில்லை. மீளாத நித்திரையில் ஆழ்ந்து விட்டான்.

"இதுதான் என் கதை அன்றைய தினத்திலிருந்து நானும் தேடிக்கிட்டு இருக்கேன். அவுங்க கிடைக்கவே இல்லை. ஆனுல், இந்தக் கெட்டிமேளச் சப்தம் மட்டும் தினமும் கேட்குது. அப்போ செல்லப்பனை எல்லோரும் கூடிக்கிட்டு அடிச்ச ஞாயகம் வருது..." என்று விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டாள் பூங்கொடி.

"பூங்கொடி! மாரிசாமி பொண்ணு, நீ! அவரு எங்கே?" என்று கேட்டான் வேதாசலம்.

"எங்க அப்பாவை உங்களுக்கு எப்படித் தெரியும்? அவங்கதான் எங்க அப்பா!"

"பூங்கொடி நான்தான் உன்னைக் கண்ணுலம் கட்டிக்க ராதாமங்கலம் வந்தேன். இன்னிக்கே உன் தகப்பனுருக்குக் கடிதாசி எழுதி என் அப்பாவைப் பார்க்கச் சொல்றேன்."

"நீங்கதானு அவர்! எனக்கு என்னவோ நீங்கதான் அவராக இருக்கவேண்டும் என்று ஒரு நினைப்பு. எங்க அப்பா செத்துட்டாரு. என் அம்மாவுக்கு உங்க தகப்பனுரைத் தெரியும், கடிதாசி போட்டு வரவழையுங்க."

* * *

அடுத்த தடவை கெட்டிமேளம் கொட்டும்போது, வேதாசலம் பூங்கொடியின் கழுத்தில் தாலி கட்டிக் கொண்டிருந்தான். அப்போது பூங்கொடியின் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகிற்று. செல்லப்பன் நேரிலேயே வந்து தன்னை ஆசி கூறுவதுபோல் ஒரு பிரமிப்பு ஏற்பட்டது!

# சிவன் சொத்து

தர்மலிங்கம் மூன்றும் முறையாகக் கையிலிருந்த தந்தியைப் பிரித்துப் படித்தார். தந்தியின் வாசகம் நெஞ்சில் தோய்ந்தபோதெல்லாம் அவர் கண்களில் நீர் முட்டி நின்றது. மலை போல அஞ்சா நெஞ்சம் படைத்த தேகம் கூட ஆட்டம் கண்டது. ஆனால், இப்படி எல்லாம் காரியங்கள் நடக்கும் என்று யார் நினைத்தார்கள்?

அவர் மனைவி கோதை கொண்ட மட்டும் சொல்லிப் பார்த்தாள். நயமாக அவள் சொன்ன அறிவுரைகள் எல்லாம் அப்போது தர்மலிங்கத்தின் காதுகளில் விழவே இல்லை. அவர் பாட்டில் தான் தீர்மானித்தபடியே காரியங்களைச் செய்துகொண்டு போனார். எதை விற்கவேண்டும் என்று நினைத்தாரோ அதையே நல்ல விலைக்கு விற்றார். அந்தத் தொகையைக்கொண்டே தன் செல்வத் திருமகள் சுமதிக்குத் திருமணம் முடித்து வைத்தார்.

ஆனால் திருமணம், முடிந்த மூன்றும் மாதமே தன் மருமகன் சேதுபதிக்கு இப்பேர்ப்பட்ட பேராபத்து வரும்

என்று அவர் கனவிலும் நினைக்கவில்லை. ஒருவனுக்குத் தேக அசௌக்கியம் அவனைக் கேட்டுக்கொண்டா வருகிறது?

தந்தியின் சாரத்தைத் தெரிந்து கொண்டவுடன் கோதை முறை வைத்து அழ ஆரம்பித்துவிட்டாள். "முருகா! சுமதியின் மாங்கல்யத்தைக் காப்பாற்றுடா. உனக்குப் பாலாபிஷேகம் செய்கிறேன்..." என்று தவித்துக்கொண்டே பிதற்றினுள் அவள்.

தர்மலிங்கம் கல்லாய்ச் சமைந்துபோனுர். கோதை ஆண்டவனைக் கூவி அழைத்தவுடன் அவருடைய நாடிகள் எல்லாம் ஒடுங்கிப் போயின. கண்கள் சலனமற்று ஒரு நிலையில் நின்றுவிட்டன. உள்ளம் மட்டும் புரண்டு புரண்டு வேதனை செய்தது.

"ஆண்டவன்...உண்மையில் அவர் சுமதியின் கணவனுக்கு உயிர்ப்பிச்சை யளித்து அவள் மாங்கல்யத்தைக் காப்பாற்றுவாரா?"—தன்னுள் எழுந்த இந்த ஒரே கேள்விக்கு அவர் விடை காண முயன்ருர்.

"கடவுள் என்னை மன்னிப்பாரா?"

* * *

கஷ்டமில்லாமல் சுக ஜீவனம் செய்யும் அதிர்ஷ்டக் காரக் கும்பலில் சேர்ந்தவர் தர்மலிங்கம். பெயரளவில் எப்படியோ அவருடைய பெயருக்கு முன் 'தர்மம்' என்ற சொல் சேர்ந்துவிட்டதே யொழிய, அதனுடைய பொருள் இதுவரை அவருக்கு விளங்காத புதிர். ஐந்து வேலி சொத்துக்கு அதிபதியான அவர், ஊரில் ஒரு கௌரவமான ஸ்தானத்தை வகித்துக்கொண்டிருந்தார். குடும்பத்தில் மனைவியும், தங்க விக்ரகம் போல ஒரே பெண்ணும் இருந்த காரணத்தினுல் சம்சார பந்தத்திலும் அதிகப் பிடுங்கல்கள் அவருக்கு இல்லை.

"குந்தித் தின்றால் குன்றும் மாளும்" என்ற பழமொழி அவருக்கு மட்டும் பொருந்தாதா? வேலை வெட்டி இல்லாமல் எவ்வளவு நாள் நிலத்திலிருந்து கிடைக்கும் வரும்படியை வைத்துக்கொண்டு காலங் கழிக்க முடியும்? செலவு மிதமிஞ்சிப் போகும்போதெல்லாம் ஈடு கொடுக்க முடியாமல் சொத்தின்மீதே கையை வைத்தார். அது தட தடவென்று இறங்கி ஒரு வேலிக்கு வந்துவிட்டது.

ஊரில் தர்மலிங்கத்தைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டார்கள். கடந்த ஒரு வருஷ காலமாக அவர் கும்பகோணமே கதி என்று இருப்பதைக் கண்டு ஊரார் அதற்குப் புதுப்புது காரணங்களைச் சிருஷ்டிக்க ஆரம்பித்தனர். அவற்றைக் கேள்வியுற்ற தர்மலிங்கம் கும்பகோணம் போவதை 'டப்'பென்று நிறுத்திக் கொண்டார்.

ஆஜானுபாகுவாக நீள நெடுக வளர்ந்திருந்த அவர் தேகம் எப்படியோ கூனிக் குறுகிவிட்டது. வயது தள்ளாமையை எட்டவில்லை என்றாலும், முகத்தில் சுருக்கம் கண்டுவிட்டது. எதையோ பறிகொடுத்து விட்டதைப் போல் சதா கண்கள் ஏக்கமாய் இருந்தன.

"இந்தாங்க இப்படிப் பேசாமே குந்திக்கிட்டு இருந்தால் என்ன அர்த்தம்? அந்தப் பனங்குடி பேர்வழிகளைப் பார்த்தீர்களா? இந்த வருஷமாவது முடிந்தால்தானே தேவலை?"—இப்படிக் கொஞ்சம் அழுத்தமாகவும் ஆத்திரமாகவும்தான் கேட்டாள் கோதை. அவள் கவலை அவளுக்கு.

தர்மலிங்கத்திற்கு இந்த உலகத்தில் மிகப் பிடித்தமான பொருள்கள் இரண்டு. ஒன்று அவருடைய செழுமைக்குப் பெயர்போன காலேமுக்கால் நிலம்; மற்றொன்று

அவருடைய பெண் சுமதி. சின்ன வயது முதற்கொண்டே அவள்மீது அவருக்குக் கொள்ளைப் பிரியம். அவள் அழுதால் அவர் சகிக்கமாட்டார். அவள் வேண்டும் என்று கேட்கும் பொருள்கள் எங்கிருந்தாலும் உடனே வாங்கி வந்து கொடுப்பார். நிலங்கள் முக்காலுக்கு மேல் கைவிட்டுப் போனவுடன், அதன்மீதிருந்த பிரியம் எல்லாம் சுமதியிடம் வந்துவிட்டன. அவள் அவருடைய கண் இமைகள்!

சுமதி இப்போது சிறு குழந்தையில்லை. 'மளமள' வென்று வளர்ந்துவிட்டாள். இயற்கையில் எழும்பும் சௌந்தர்யங்கள் எல்லாம் அவளிடம் வந்து குடி புகுந்து விட்டன. அவளைப்பற்றித்தான் கோதை சொன்னாள். இரண்டு வருஷமாகத்தான் சொல்லிக்கொண்டிருக்கிறாள். அப்போது போல் இப்போதும் இருக்க முடியுமா?

"கோதை! அவர்கள் கடிதம் எழுதுகிறேன் என்று சொன்னார்கள். இன்னும் எழுதவில்லை. பதில் வந்த பிறகு பார்த்துக் கொள்வோமே?" என்றார் தர்மலிங்கம் தன் முக வாய்க்கட்டையைத் தடவிக்கொண்டே சமாதானமாக.

கோதைக்கா விஷயம் தெரியாது? வீட்டோடு அடைபட்டுக்கிடந்தாலும் அவளுக்குச் சாமர்த்தியம் அதிகம். ஆனால், மிகப் பொறுமைசாலி. கணவனே சகலமும் என்ற பண்பில் ஊறிப்போனவள் ஆதலால், தர்மலிங்கத்திடம் பேசும்போது வார்த்தைகளை அளந்தே பேசுவாள். அவர் கோபப்படும்படியோ ஆத்திரப்படும்படியோ ஒரு வார்த்தைகூடச் சொல்லமாட்டாள். இதன் காரணமாகவே தர்மலிங்கத்திற்குத் தன் மனைவிமீது ஓர் அலாதியான வாத்சல்யம்...மரியாதை.

"அவர்கள் கடிதம் எழுதும்வரை நாம் சும்மா இருக்கலாமா? நமக்குத்தானே அதில் அக்கறை இருக்கவேண்

டும்? நீங்கள் எதற்காக யோசிக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும்......" என்று சொல்லிக்கொண்டே கோதை தர்மலிங்கத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

தர்மலிங்கத்திற்குத் திக்கென்றது, "ஒரு யோசனையும் இல்லை, கோதை. கடிதத்தைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் உள்ளம் குழம்பியவராக.

"கடிதம் இருக்கட்டும். அவர்கள் கேட்டால் நம்மால் செய்ய முடியுமா? பத்தாயிரம் ரூபாய்க்குச் சீர் எடுக்க வேண்டும் என்று சொல்கிறார்களே, அதற்கு என்ன செய்வதாக உத்தேசம்?..."

கோதைக்கு எல்லா விவரங்களும் தெரிந்துவிட்டன என்று நிதர்சனமான பிறகு, தர்மலிங்கத்திற்கு உண்மையை ஒளிக்க இஷ்டமில்லை. தன்னிடம் ரொக்கம் இருக்கிறது என்று கோதை நம்பிக்கொண்டிருக்கிறாள் என்றுதான் அவர் நினைத்திருந்தார். பணம் கையில் இல்லை என்று மனைவியிடம் கூறக்கூட அவருக்கு வெட்கம். எல்லாம் எங்கே என்று அவள் கேட்டுவிட்டால் என்னசெய்வது என்ற பயம் வேறு. இப்போது எல்லாம் தெளிந்துவிட்டது.

"கோதை, அதற்காகத்தான் யோசிக்கிறேன். கல்யாணம் என்றால் நம் அந்தஸ்திற்குப் பதினைந்தாயிரம் வேண்டும். இப்போது கையில் ஐயாயிரம்தான் இருக்கிறது. பாக்கிப் பணத்திற்கு எங்கேபோவது என்றுதான் யோசித்துக்கொண்டிருக்கிறேன். இருக்கும் ஒரு வேலி நிலத்தையும் விற்றுவிட்டால் பிறகு நம் பாடு கஷ்டமாகிவிடும்..." யோசனையில் ஆழ்ந்துவிட்டார் தர்மலிங்கம்.

**கோ**தைக்குப் பனங்குடி வரனைக் கைவிடுவதில் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. நல்ல பரம்பரையைச்

சேர்ந்த பணக்காரக் குடும்பத்துப் பையன் அவன். அதோடு நன்ருகப் படித்திருக்கிருன். எல்லாவற்றிற்கும் மேலாகச் சுமதிக்கு அவனைப் பிடித்துவிட்டது. இந்த நிலையில் அவனைத்தானே சுமதிக்கு நிச்சயம் செய்ய வேண்டும்?

தர்மலிங்கத்திற்கு மட்டும் பனங்குடிப் பேர்வழிகளிடம் விருப்பம் இல்லையா!

அவருக்கும் சுமதியை எப்படியாவது நல்ல இடத்தில் கல்யாணம் கட்டிவிடவேண்டும் என்ற எண்ணம் உள்ளத்தில் வலுப்பெற்றிருந்தது. ஆனுல், அதைச் செய்ய மிஞ்சியிருக்கும் அவருடைய அந்த ஒரு வேலி நிலத்தை விற்றுத்தான் ஆகவேண்டும். நிலத்தை விற்கவோ தர்மலிங்கத்திற்குக் கொஞ்சங்கூட மனமில்லை. பிதிர்ரார்ஜிதமாக வந்து எஞ்சி நிற்கும் அதையும் விற்றுவிட்டால் மேற்கொண்டு வாழ்க்கை எப்படி நடக்கும்? தர்மலிங்கத்திற்கு ஒன்றும் புரியவில்லை. பையனைப் பெற்றவர்களிடம் போய்ப் பல்லைக் காட்டிக் கெஞ்சி, 'என்னுல் அவ்வளவுதூரம் செய்ய முடியாது............நீங்கள்தான் பெரிய மனசு பண்ணி...' என்று சொல்லச் சுயமரியாதை குறுக்கிட்டது. வெகு இக்கட்டான நிலைமையில் விடிவு காண அவர் தவித்துக்கொண்டிருந்தார்.

அப்போதுதான் தர்மலிங்கத்திற்கு ஓர் அரிய சந்தர்ப்பம் கிடைத்தது. அதாவது அது ஓர் அரிய சந்தர்ப்பம் என்று அவர் நினைத்துவிட்டார். அது தான் எவ்வளவு பெரிய தவருக...அபசாரமாகப் போய்விட்டது!

தர்மலிங்கம் வசித்து வந்த கிராமத்தின் மேற்குக் கோடியில் அக்கிரகாரத்தின் இரு சாரி வீடுகளையும் பார்த்துக்கொண்டு ஒரு சிவன் கோவில் இருந்தது. கோவி

வில் மனித சஞ்சாரமே இல்லை. பாழடைந்து கிலமாகக் கிடந்த அதனுள் பக்தர்கள் போகவே அஞ்சினர். 'குர்குர்' என்று வௌவால்களும் பருந்துகளும் சதா வட்டமிட்டுக் கொண்டிருக்கும் அந்தக் கோவிலுக்குத் திடீரென்று ஒரு நாள் விடிவு காலம் பிறந்தது.

கோவில் சிறியதாய் இருந்தாலும் அதற்குச் சொத்துக்கள் ஏராளம் என்று எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள். ஆனால், சொத்தின் விவரங்கள் மட்டும் தெரியவில்லை. யார் யாரோ கோவிலின் சொத்துக்களை அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள் என்று மட்டும் திட்டமாகத் தெரிந்தது.

'கோவிலைப் புனருத்தாரணம் செய்யவேண்டும். அதன் சொத்துக்களை எல்லாம் சேகரம் செய்யவேண்டும்' என்று அரசாங்கத்தார் ஆக்ஞை பிறப்பித்தபோது ஊரில் உள்ளவர்கள் எல்லாம் அதை வெகு சந்தோஷத்தோடு வரவேற்றார்கள். ஒரு சிலருக்குத்தான் அதைப்பற்றிக் கவலை ஏற்பட்டது.

கோவிலின் ஜீரணோத்தாரண வேலை ஆரம்பமானவுடன், அதன் பொறுப்புக்களை எல்லாம் ஏற்று நடத்த ஊருக்குள் பெரியவர்கள், பிரபலஸ்தர்கள் என்று மூவரைப் பொறுக்கி அவர்களிடம் ஒப்படைத்தார்கள். மூவருக்குள் தர்மலிங்கம் ஒருவர். அவர்தான் எவ்வளவு அக்கறையாகக் காரியங்கள் செய்துகொண்டுபோனார்!

பழைய தாஸ்தாவேஜுகள், ரிகார்டுகள், கடன் பத்திரங்கள் முதலானவற்றைப் பார்வையிடும்போது கோவில் ஐவேஜுகள் புலனாயின. அக்கிரகாரத்தில் இரண்டு வீடுகள், ஆவர்ணி புதுச்சேரியில் பதினைந்து மாநிலம், இதைத் தவிர சேரியில் மனைக்கட்டுகள் எல்லாம் கோயில் சொத்தில் வரவு வைத்துக்கொள்ளப்பட்டன.

இவ்வளவுகாலம் சொத்துக்களை ஆண்டு அனுபவித்து வந்தவர்கள் எதிர் வழக்குப் போடவே இல்லை. 'இனி இவை சிவன் கோவிலையே சாரும்' என்று உத்தரவு பிறப்பித்த போது, "ஆஹா" என்று ஒத்துக்கொண்டு விட்டார்கள்.

ஆனல்?...

தர்மலிங்கத்தின் வீட்டில் ஒரு சிறு தந்தப் பெட்டி இருந்தது. அதை அவர் வெகு அந்தரங்கமாகத் தன்னுடைய இரும்புப்பெட்டியில் வைத்திருந்தார். அந்தப் பெட்டியில் பழையகாலத்து நகைகள் இருந்தன. பொன்னலும் மணியாலும் மாணிக்கங்களாலும் செய்யப்பட்ட அவை விலை மதிப்பிடமுடியாமல் இருந்தன. தர்மலிங்கத்திற்கு இந்த நகைகளை என்னசெய்வது என்றே தெரியவில்லை. கடந்த பதினைந்து வருடங்களாக அந்த நகைகளைப்பற்றி அவருக்கு எந்தக் கவலையுமில்லை; இடைஞ்சலுமில்லை.

இப்போது?...

கோவில் சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகள் அந்த நகைகளைச் சிவனுடைய சொத்து என்று ஊர்ஜிதம் செய்தன. முதன்முதலில் தர்மலிங்கம் அதைப் பார்த்தபோது கொஞ்சம் அசந்துபோனர். தந்தப் பெட்டியில் உள்ள பழைய காலத்து நகைகள் தன்னுடைய உடைமையல்ல என்பது தெரிந்திருந்தபோதிலும் கோவிலின் சொத்தாக ரிகார்டில் இருக்கும் என்று அவர் எண்ணவில்லை.

அந்த ஊரில் இருந்த சில வயதான பேர்வழிகள், கோவில் நகைகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். கோதையின் தகப்பனர்கூடத் தர்மலிங்கத்திடம் அதைப் பற்றிப் பேசி இருக்கிறர். அப்போதெல்லாம் தர்மலிங்கம் அவற்றைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. நாளாவட்டத்தில் கிழம் கட்டைகள் ஒருவர் பின் ஒருவராக

இகத்தைவிட்டு மறைந்தவுடன் நகைகளைப்பற்றிய விஷய மும் ரகசியமாய்ப் போய்விட்டது. கோதையின் தகப்பனார் இறந்தவுடன் தர்மலிங்கம் கொஞ்சம் நஞ்சம் பட்ட கவலை யும் அடியோடு மறைந்துவிட்டது. தந்தப் பேழையில் இருந்த நகைகளும் அவருடைய ஜங்கம சொத்துக்களோடு சேர்ந்துவிட்டன.

இப்போது என்ன செய்வது? அதுதான் தர்மலிங்கத் திற்குப் புரியவில்லை. நகைகளைக் கோவிலுக்குக் கொடுத்து விடுவதா? அல்லது தன்னுடைய நிரந்தர உரிமைப் பொரு ளாக வைத்துக்கொள்வதா?

நகைகள் சம்பந்தப்பட்ட காகிதங்களைப் பரிசீலனை செய்யும்போது நல்லவேளை, யாரும் பக்கத்தில் இல்லை. அவருடைய அதிர்ஷ்டம் அவர் அதை முதலில் பார்க்க நேர்ந்தது.

இரவு வெகு நேரம் படுக்கையில் புரண்டு கொண்டிருந் தார் தர்மலிங்கம். மேற்கொண்டு என்ன செய்வது என்று திட்டம் வகுத்துக்கொண்டிருந்தது உள்ளம். நீண்ட நேர மனச்சாட்சி போராட்டத்திற்குப் பிறகு நகைகள் பற்றிய அந்தச் சாஸனம் தீக்கிரையாயிற்று. தர்மலிங்கத்திற்கு நகைகளும் சாஸ்வதமாயின.

நகைகளைத் தன்னுடையதாக்கிக்கொள்ள அவர் விழைந்த காரணம் சுமதிதான். பனங்குடியார், பெண் பார்த்துவிட்டுப் போன சமயம் அது. கையில் கல்யாணத் திற்கு ரொக்கமாகப் பத்தாயிரம் ரூபாய் வேண்டியிருந்தது. பணத்திற்காகத் தவித்துக்கொண்டிருந்த அவர் இந்தப் பழைய நகைகளை விற்கத் தீர்மானித்திருந்தார்.

கோவில் சம்பந்தப்பட்ட பூர்வாங்க வேலைகள் ஆரம்ப மானவுடன் தர்மலிங்கம் தன் பெண் கல்யாண விஷயத்தில்

பிரயாசை எடுத்துக்கொண்டார். கும்பகோணத்தில் தனக்குத் தெரிந்த ஒரு பெரிய சேட்டிடம், "என்னுடைய குடும்பத்தில் முன்னோர்கள் அணிந்துவந்த பழைய நகைகள்" என்று கூறி அவற்றை விற்க விலை பேசினார்.

"இதோ பாருங்க, நான் சொல்கிறேன் என்று கோவிக்காதீங்க. அந்த நகைகள் நம்முடையதல்ல. அதை விற்கவும் கூடாது" என்று எவ்வளவோ தடுத்தாள் கோதை. அதற்கெல்லாம் கொஞ்சங்கூட அசைந்து கொடுக்கவில்லை தர்மலிங்கம். "கோவில் சொத்துக்களில் தான் இந்த நகைகள் இல்லை என்று தெளிவாகிவிட்டதே? இனிமேல் என்ன?" என்று சொல்லிக்கொண்டே அவர் தன் காரியங்களைச் செய்துகொண்டுபோனார்.

கோதைக்கு மனசு கிடந்து அலை மோதிற்று. யாரிடம் சென்று முறையிட்டுக்கொள்வது என்று தான் தெரியவில்லை.

கும்பகோணம் சேட் நகைகளைப் பார்வையிட்டார். அவ்வளவும் அசல் தங்கம், மாற்றுக் கெடாத வைரங்கள் என்று தெரிந்தவுடன் தர்மலிங்கம் கேட்ட பத்தாயிரம் ரூபாயை எண்ணிக்கொடுத்தார். கண்கள் கலங்க, இதயம் துடிதுடிக்க, மனச்சாட்சி வாள்கொண்டு அறுக்க, நடுநடுங்கிய கைகளில் ரூபாயைப் பெற்றுக்கொண்டார் தர்மலிங்கம்.

கையில் ரொக்கம் வந்தவுடன் சுமதிக்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது. சேதுபதிக்கும் அவளுக்கும் கிராமத்து மக்கள் அதிசயப்படும்படி ஒரு பெரிய திருவிழா போல் கல்யாணம் இனிது நடந்தேறியது.

கல்யாணமான மறு மாதம் சேதுபதி கிராமத்திற்கு வந்து சிறிது காலம் தங்கியிருந்தான். பிறகு சுமதியை

அழைத்துக்கொண்டு தன்னுடைய சொந்த ஊருக்குச் சென்றான். அதற்குக் கொஞ்ச நாட்களுக்குப் பிறகு "சேதுபதியின் உடல்நிலை கவலைக்கு இடமளிக்கிறது, உடனே வரவும்" என்று தர்மலிங்கத்திற்கு தந்தி ஒன்று வந்து அவரை ஆரம்பத்தில் கூறியதுபோல் ஓர் ஆட்டம் ஆட்டி விட்டது.

*   *   *

ஜிவு ஜிவு என்று உடலில் உஷ்ணம் ஏறுவதைப் போல் இருந்தது தர்மலிங்கத்திற்கு. பாணலியில் உடலைப் போட்டு யாரோ வாட்டுவதைப்போல் இருந்தது. பாளம் பாளமாக யாரோ சூடுவதைப் போல் இருந்தது.

"சிவன் சொத்து குலநாசம்' என்று பெரியவர்கள் சும்மாவா சொல்வாங்க. என் குழந்தை பிழைக்க வேண்டும் என்றால் ஆண்டவன் மனது குளிரணும். பழநி ஆண்டவா! உனக்கு அபசாரம் பண்ணிவிட்டோம். எங்களைக் காப்பாற்றுடா?" என்று சத்தம் போட்டு அழ ஆரம்பித்து விட்டாள் கோதை.

தர்மலிங்கம், தூணில் அப்படியே சாய்ந்துவிட்டார்: கண்ணீர் தாரை தாரையாக வந்துகொண்டிருந்தது. நெடுநேரம் குந்தியிருந்துவிட்டு ஏதோ தீர்மானத்திற்கு வந்தவராய், "கோதை, நீ உடனே ஊருக்குப் புறப்படு. நான் சில முக்கிய காரியங்களைப் பார்த்துக்கொண்டு நாளை வருகிறேன்" என்று சொல்லிவிட்டு அவளுடைய பதிலுக்குக்கூடக் காத்திராமல் விடு விடு என்று வெளியே கிளம்பி விட்டார்.

"சிவபெருமானே! உங்களுக்கு நான் பெரிய பாதகம் செய்துவிட்டேன். என்னை நீங்கள்தான் ரக்ஷிக்கவேண்டும். உங்கள் சொத்து எனக்கு வேண்டாம். இப்போதே

உங்கள் சொத்தை உங்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். என் சுமதிக்கு மட்டும் மாங்கல்யப் பிச்சை கொடுங்கள்'' என்று திரும்பத் திரும்ப வாய்விட்டுப் புலம் பிக்கொண்டு கும்பகோணத்தை யடைந்தார் தர்மலிங்கம்.

கும்பகோணத்திலுள்ள சேட்டின் பங்களாவை அடைந்தபோது தர்மலிங்கத்திற்கு ஏமாற்றமே காத் திருந்தது. சேட் ஊரில் இல்லை. வியாபார விஷயமாகப் பம்பாய் சென்றிருந்தார். தர்மலிங்கம் தான் விற்ற நகை களைப்பற்றிப் பிரஸ்தாபித்தபோது, சேட்டின் குமாஸ்தா சொன்ன தகவல் தர்மலிங்கத்தைப் பிரமிப்படையச் செய்தது.

''பிள்ளைவாள், உங்களிடம் நகைகளை வாங்கினாலும் வாங்கினார். சேட்டிற்கு அன்று முதல் மனசே சரியில்லை. ஊரில் உள்ள சில தறுதலைகள் அந்த நகைகளைப் பற்றி இல்லாத பொல்லாதவற்றை எல்லாம் வந்து சொல்லிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் அதற்கு ஒரு 'சான்ஸ்' வந்தது. நகைகளை விற்றுவிட்டார்'' என்றார் குமாஸ்தா.

''நகைகளை விற்றுவிட்டாரா? யாருக்கு?...'' கொஞ்சம் பரபரப்புடன் கேட்டார் தர்மலிங்கம்.

''வேறு யாருமில்லை. உங்கள் சம்பந்திக்குத்தான். பனங்குடி பிள்ளைவாள் தான் தொந்தரவு செய்து அவை களை வாங்கிக்கொண்டார்....''

இந்தச் செய்தியைக் கேட்டவுடன் வானமே பிளந்து தன் தலைமீது விழுவதைப் போலிருந்தது தர்மலிங்கத் திற்கு. அங்கு வீண் கால விரயம் செய்யாமல் பனங்குடிக் குப் பிரயாணமானார்.

பனங்குடியை நெருங்க நெருங்கத் தர்மலிங்கத்தின் மனக் கவலை அதிகமாகிக்கொண்டே இருந்தது.

சம்பந்தி வீட்டை யடைந்தபோது அவர் வீடு பூட்டிக் கிடந்தது. அதைப் பார்த்தவுடன் தர்மலிங்கம் கலவரம் அடைந்தார். அண்டை அயலாரை விசாரித்ததில் சேதுபதிக்கு உடல் நிலை கடுமை ஆகிவிட்டதென்றும், நாகைப்பட்டினம் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றிருக்கிறார்கள் என்றும் சொன்னார்கள்.

தர்மலிங்கம் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டார். "சுமதி, சுமதி!" என்று வாய்விட்டுப் புலம்பினார். வீட்டின் வாசற்படியில் அப்படியே அசந்து உட்கார்ந்துவிட்டார்.

"தர்மலிங்கம்... தர்மலிங்கமா உட்கார்ந்து இருக்கிறது?" என்று யாரோ கூப்பிட்டவுடன் தான் அவருக்கு உணர்வு வந்தது. கண்களைத் தூக்கிக் கவனித்தார். எதிரில் சம்பந்தி முதலியாண்டான் பிள்ளை—சேதுபதியின் தகப்பனார்—நின்றுகொண்டிருந்தார்.

"அண்ணாச்சி, அண்ணாச்சி! குழந்தைக்கு உடம்பு எப்படி இருக்கு?" என்று அப்படியே முதலியாண்டானைக் கட்டிக்கொண்டார் தர்மலிங்கம்.

முதலியாண்டான் பதில் பேசவே இல்லை. வீட்டின் கதவைத் திறந்துகொண்டு தர்மலிங்கத்தை உள்ளே அழைத்துச் சென்றார்.

முதலியாண்டான் பேசாதிருப்பதைக் கண்ட தர்மலிங்கம் முன்னிலும் பன்மடங்கு அதிகக் கவலையடைந்தார். "என்ன அண்ணாச்சி, பேசமாட்டேங்கறீங்க? சேதுபதிக்கு உடம்பு..." என்று இழுத்தார்.

"தர்மலிங்கம்! பேசுவதற்கு இனி என்ன இருக்கிறது? உம் காரியம் என்னை அப்படிச் செய்துவிட்டது" என்றார் முதலியாண்டான்.

"என்ன அது?...நான் என்ன காரியம் செய்தேன்?..."

"தர்மலிங்கம், உம் மனச்சாட்சியைக்கேட்டுப் பாரும். கைகளைத்தூக்கி மார்பில் வைத்துக்கொள்ளும். புரியும்..." என்று உறுமினுர் முதலியாண்டான்.

தர்மலிங்கத்திற்கு ஏதும் விளங்கவில்லை. "என்ன அண்ணுச்சி? எல்லாம் ஒரே புதிர்..." என்ருர் தயங்கிய படி.

"புதிர் இல்லை தர்மலிங்கம். பச்சை உண்மை. கல்யாணத்திற்கு என்று பழைய நகைகளை விற்றீர்களே... அவை உங்கள் முன்னேர்களுடையனவா?..." இப்போதாவது உண்மையை ஒப்புக்கொள்ளும். சிவன் சொத்தை விற்றுக் கல்யாணம் செய்த உங்கள் குலம் உருப்படுமா?"

ஆகாசமும் பூமியும் சுழல்வதைப் போல் இருந்தது தர்மலிங்கத்திற்கு. எதிரில் நின்று கேட்பவர் முதலியாண்டாணுகவே அவருக்குத்தோன்றவில்லை. சாட்சாத் கயிலையங்கிரி வாசனே வந்துவிட்டதைப் போலிருந்தது. அவர் பதில் சொல்லவில்லை. அப்படியே அவர் காலடியில் விழுந்து விட்டார்.

சிறிது மௌனத்திற்குப் பிறகு, "முதலியாண்டான், என்னை மன்னித்துவிடுங்கள்... அபசாரத்தை உணர்ந்த நான் ஓடோடிச் சேட்டிடம் போனேன்..." என்று தர்மலிங்கம் பேசி முடிப்பதற்குள் முதலியாண்டான் பேசினுர்.

"தர்மலிங்கம் வெள்ளம் வந்த பிறகா அணை போடுவார்கள்? நல்ல வேளையாக நான் அணை போட்டுவிட்டேன். சேட்டிடமிருந்து அந்த நகைகளை விலைக்குவாங்கி உங்கள் கிராமத்தின் சிவபெருமானுக்கே அதைக்கொடுத்துவிட்டேன்..."

"என்ன ?..."

"ஆம் தர்மலிங்கம். சுமதி எங்கள் வீடு வந்த பிறகு அவள் எங்கள் குழந்தையல்லவா? நீர் செய்த பெரும் பாபத்திற்கு நானே பரிகாரம் தேடிவிட்டேன்" என்றார் முதலியாண்டான் உணர்ச்சி பொங்க.

இருவரும் உள்ளே பேசிக்கொண்டிருந்தபோது வாசலில் 'கணகண' வென்று சைகிள் மணி ஒலித்தது. பரபரப்புடன் இருவரும் வெளியே ஓடி வந்தார்கள். சைகிளில் வந்தவன் ஆஸ்பத்திரி ஆள். ஒரு கடிதத்தை முதலியாண்டானிடம் கொடுத்தான்.

"காலையில் நான் சொன்னபடியே சேதுபதியின் ஜுரம் இறங்கிவிட்டது. இனி கவலைக்கு இடமில்லை" என்று டாக்டரின் கையெழுத்துடன் கடிதம் செய்தியைக் கூறிற்று.

# குறள் செய்த விந்தை

புரொபஸர் ராமகிருஷ்ணன் தனது நெற்றிப்பொட்டுக்களைத் தடவிக்கொண்டிருந்தார். அவர் மனத்தில் ஏற்பட்ட போராட்டங்களைச் சமனப்படுத்தத் தமது கைகள் உதவும் என்று நெற்றிப் பொட்டுக்களைத் தடவினரோ, என்னவோ? கைகள் பொட்டுக்களை வருட வருடச் சிந்தனை ஓட்டம் நீண்டது; மனத்தில் போராட்டம் அதிகரித்தது.

சாளரத்தின் வழியே 'ஜில்'லென்று வீசிய இளங் காற்று மேஜையின்மீது விரிந்து கிடந்த புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டின. பக்கங்கள் புரளும்போது உண்டான 'சடசட'வென்ற சப்தம் நிசப்தத்தில் கொஞ்சம் பயங்கரமாகவே ஒலித்தது. அறையில் பிரகாசமாக எரிந்துகொண்டிருந்த நாற்பது வாட் 'பல்ப்' மட்டும் அப்போது இல்லை என்றால் ராமகிருஷ்ணன் புத்தகப் பக்கங்கள் போட்ட சப்தத்தில் பயந்தேதான் போயிருப்பார். ஏனெனில், அப்போது அவருடைய மனநிலை அப்படி இருந்தது.

ராமகிருஷ்ணன் உள்ளத்தில் போராட்டத்தை எழுப் பக்கூடிய அந்த ஒரு நிகழ்ச்சி சம்பவித்ததில் வியப்பே இல்லை. சுதாவாக அது யாருக்கும் ஏற்படுவதுதான். ஆனால், ராமகிருஷ்ணன் அதனால் பாதிக்கப்பட்டதுதான் அதிசயம். சாதாரண மனிதனாக இருக்கும் பட்சத்தில் மனக்கிலேசம் ஏற்படுவது சகஜம். ஆனால், புரொபஸர் ராமகிருஷ்ணன் இப்படி மனத்தைப் பறிகொடுத்துவிட்டுப் பரிதவிப்பதுதான் விந்தை!

அவருக்கு அது வாழ்க்கையைப் பாதிக்கும் ஒரு பெரிய விஷயம். இல்லாவிட்டால் தன் இதயத்தில் அந்த நிகழ்ச் சியை மீண்டும் மீண்டும் வரவழைத்துக்கொண்டு அதனால் ஏற்படும் ஓர் இன்ப வேதனையில் நாழிகையைப் போக்கிக் கொண்டிருப்பாரா?

ராமகிருஷ்ணன் ஓர் இளம் வாலிபர். அரசாங்கத் தார் ஆதரவில் நடக்கும் ஒரு கல்லூரியில் பேராசிரியரா யிருந்தார். முப்பதாவது வயதைத் தாண்டிக்கொண்டிருந் தார். நல்ல கட்டுமஸ்தான் சரீரம். கல்லூரிப் படிப்பில் முதல்வராய்த் தேறியிருந்தாலும் சாதாரணமாக ஏற்படும் நெளிவு சுளிவுகள் உடலிலும் இல்லை; முகத்திலும் இல்லை. கலகலவென்று இனிமை தோய்ந்த முகம். அறிவின் மிகு தியை எடுத்துக் காட்டும் ஒளி பொருந்திய கண்கள். அதை அலங்கரிக்கும் கறுப்புப் 'பிரேம்' போட்ட மூக்குக் கண்ணாடி. கலையின் பிரதிநிதி போல் உடல் நிறைந்த வெண்ணிற உடை.

காலேஜ் விடுதியில் வசித்துக்கொண்டிருந்தார் அவர். இன்னும் கலியாணம் ஆகவில்லை. அடுத்த தை, மாசி, பங்குனி என்று மூன்று வருஷங்கள் கடந்துவிட்டன. அது அப்படிக் கடந்ததுதான் இப்போது எவ்வளவு

ஆபத்தாகிவிட்டது! பேராசிரியர் என்ருல் மட்டும் உள்ள மில்லாதவரா?

எல்லா நண்பர்களையும் சந்திப்பதைப் போலத்தான் அவர் தன் பால்ய நண்பன் ரகுநாதனை அன்று மாலை சந்தித்தார். ரகுநாதன், ராமகிருஷ்ணனுடன், எஸ். எஸ். எல். சி. வகுப்பில் படித்தவர். ஹைஸ்கூலில் இருவருக்கும் நெருங்கிய நட்பு. படிப்பில் அக்கறையும் சூடிகையும் இல்லாத ரகுநாதனிடம் ஏனே ராமகிருஷ்ணனுக்கு அவ்வளவு விசுவாசம். பரீட்சைகள் முடிவடைந்தவுடன் ரகுநாதன் திருச்சிக்குச் சென்றுவிட்டார். அந்த வருஷம் அவர் பரீட்சையில் தேறவில்லை. ஆனுலும், மீண்டும் சென்னைக்குத் திரும்பவில்லை. நண்பர்களுக்குள் ஒன்றிரண்டு கடிதங்கள் மூலம் போக்குவரத்து இருந்தது. ராமகிருஷ்ணன் காலேஜில் சேர்ந்தவுடன் அதுவும் நின்று போயிற்று. இந்தப் பதினைந்து வருஷங்களாக ரகுநாதனுக்கோ, ராமகிருஷ்ணனுக்கோ ஒருவரைப்பற்றி ஒருவருக்கு ஒன்றும் தெரியாது. இன்றுதான் எதேச்சையாக இருவரும் சந்திக்க நேர்ந்தது.

"என்ன ராமகிருஷ்ணன்! என்னைத் தெரியவில்லை? நான்தான் ரகு. ஆளே ரொம்ப மாறிவிட்டாயே" என்று முதுகில் ஒரு தட்டுத் தட்டிக் கூப்பிட்டவுடன்தான் ராமகிருஷ்ணன் ரகுவைத் திரும்பிப் பார்த்தார். பார்த்தவுடன் தான் எப்பேர்ப்பட்ட அதிர்ச்சியும் பிரமிப்பும் காத்துக் கிடந்தன!

ராமகிருஷ்ணன் ரகுவை ஏற இறங்கப் பார்த்து விட்டு, அவர் பக்கலில் ஒயிலாக மயில்போல் நின்ற மங்கையைக் கண்டவுடன்தான் திடுக்கிட்டுப் போனுர். லக்ஷ்மி விலாசம் அவள் முகத்தில் திகழ்ந்தது. வெல்வெட் போன்ற சரீரம் அவளுக்கு. மகரந்தப் பொடிகள் தூவி

ளுள் போன்ற நிறத்தில் அமைந்த பட்டாடை. அதே நிறத்தில்தான் சோளியும். கட்டுக் கூந்தலை ஜடையாக முறுக்கி, 'மலையாளப் பிச்சோடா' போட்டுக்கொண்டிருந் தாள். அர்த்த சந்திர வடிவத்தில் அமைந்த கனகாம்பரப் பூவைத் தாங்கி நின்ற ஜடையலங்காரம் உடுத்திருந்த சேலையையும் சோளியையும் பழித்தது.

ராமகிருஷ்ணன் முதுகில் கை வைத்து ரகு பேசிக் கொண்டிருந்தபோது அவள் மலர மலரப் புரொபசரைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

ராமகிருஷ்ணன் மெதுவாகச் சமாளித்துக்கொண் டார். "ரகுவா! என்னடா அடையாளமே தெரியவில்லை. நான் அப்படியேதான் இருக்கிறேன். இப்போது எங்கு இருக்கிருய்? சௌக்கியமா?" என்று கூறிவிட்டுக் கடைக் கண்ணுல் பின்னுல் நின்ற யுவதியைக் கவனித்தார். அவ ளைப் பார்க்க வேண்டாம் என்று அறிவுரை எழுந்த போதும், உள்ளம் அத்துமீறி, 'ஆர்டர்' கொடுத்து விட்டது.

"நான் திருச்சியில்தான் இவ்வளவு நாளாக இருந் தேன். இனிமேல் மெட்ராஸ்தான். மாம்பலத்தில்தான் வீடு. ஒருநாள் வாயேன்" என்று சொல்லிக்கொண்டே பின் பக்கம் திரும்பி, "வாசந்தி, என்ன தள்ளி நிற்கிருய்? இவர்தான் என் பால்ய நண்பன் ராமகிருஷ்ணன். இப் போது..." மேலே வாக்கியத்தை முடிக்க முடியாமல் திண் டாடினுர் ரகுநாதன், அதற்குள் ராமகிருஷ்ணன் நிலைமை யைச் சட்டென்று புரிந்துகொண்டு, "அரசாங்க கல்லூரி யில் புரொபஸராய் இருக்கிறேன்" என்று சொற்ருெடரை முடித்துவிட்டு வாசந்தியைக் குறும்பாகப் பார்த்தார்.

நண்பர்கள் ஒருவரை யொருவர் அறிமுகம் செய்யும் காட்சியைக் கண்டு சலவைக் கல்லில் முத்துக்கள் இறை வதுபோலக் 'கலீர்' என்று சிரித்துவிட்டாள் வாசந்தி.

ரகு அவள் சிரிப்பைச் சட்டை செய்யாத பாவனையில், "ராமகிருஷ்ணன் இவள்தான் என் அருமை மனைவி! வாசந்தி" என்றார் சற்றுப் பெருமை கலந்த குரலில்.

"நமஸ்தே" என்று கைகூப்பினாள் வாசந்தி.

"நமஸ்தே" என்று பதில் வணக்கம் செலுத்தினார் புரொபஸர். ஆனால், அவருக்கு மட்டும், ரகு 'வாசந்தியை என் அருமை மனைவி' என்று சொல்லி அறிமுகப்படுத்தியது பிடிக்கவில்லை. மனத்தில் அந்த 'அருமை' என்ற சொல் உறுத்தி உறுத்தி வேதனை செய்தது.

நண்பர்கள் இருவரும் பேசிக்கொண்டே பாரிஸ் கார்னரைத் தாண்டி பிராட்வே வரை வந்துவிட்டனர். இடையிடையே வாசந்தியும் அவர்கள் சம்பாஷணையில் கலந்து கொண்டாள். வாசந்தியின் பேச்சு தேன்மழை பொழிவதைப் போலத்தான் இருந்தது. புரொபஸரின் கால்கள் தரையில் பாவவே இல்லை. எங்கு, யார் கூடப்போகிறோம் என்ற நினைவே இல்லாமல் அவர் போதையில் இருப்பதைப் போலவே காணப்பட்டார்.

பிராட்வே தாண்டியவுடன் ரகுநாதன் ராமகிருஷ்ணனிடம் விடை பெற்றுக்கொண்டார். வாசந்தியும் ராமகிருஷ்ணனுக்கு வணக்கம் தெரிவித்தாள். புரொபஸர் கைகளைக் கூப்பும்பொழுது அவர் கண்கள் வாசந்தியை அப்படியே கவ்வின. புரொபஸர் தன்னைக் கூர்மையாகப் பார்க்கிறார் என்பதை அறிந்தவுடன் தான் வாசந்தியின் கண் இமைகள் எவ்வாறு துடித்தன! அவை என்ன பட்டாம்பூச்சியின் இறகுகளா?

ஹாஸ்டலில் வந்து சாய்ந்த ராமகிருஷ்ணனுக்கு எதிலும் வேலை ஓடவில்லை. பார்த்த இடங்களில் எல்லாம்

வாசந்தி தோன்றினுள். உள்ளத்திலோ, நிரந்தரமாகக் குடியேறிவிட்டாள் போலிருந்தது.

* * *

புரொபஸர் வியர்வை வெள்ளத்தில் மிதந்திருந்த போது பொழுது பல பலவென்று விடிந்துவிட்டது. இரவு பூராவும் தூங்கினுற்போலவும் இருந்தது. தூங்காதது போலவும் இருந்தது. நிச்சயமாக ஒன்றும் அனுமானிக்க முடியவில்லை. ஆனுல், சிந்தனைகள் மட்டும் காட்டாறு போல் ஓடிக்கொண்டிருந்தது என்று திட்டமாகச் சொல்ல முடிந்தது. அதற்கு வாசந்தியே சாட்சி.

மறுநாள் புரொபஸருக்குக் கொள்ளை வேலை. அதில் எல்லாம் கொஞ்சமாவது நாட்டம் சென்ருல்தானே? காலேஜிலும், வகுப்பிலும், பாடப்புத்தகங்களிலும் வாசந்தியே நடமாடினுள். புரொபஸர் அவளையே மனக் கண்ணில் உற்றுப் பார்த்துக்கொண்டு அன்றையப் பொழுதை வெட்டியாகக் கழித்துவிட்டார்.

ஒருநாள். அன்று காலேஜ் விடுமுறை. புரொபஸர் மாலைப் பொழுதை ஹாஸ்டலில் வீனே கழிக்க விரும்பவில்லை. இப்பொழுதெல்லாம் அவர் சும்மா சிந்தித்துக்கொண்டு இருக்க இஷ்டப்படுவதில்லை. சிந்தனைக்குள்ள கருப்பொருள் வாசந்தியாக ஆகிவிட்டபடியால், அவளை மறக்க எண்ணியோ என்னவோ, தனது 'எங்கேஜ்மெண்ட்'களை அவர் தினசரி தூங்கும்வரை நிரப்பிக்கொண்டிருந்தார். அன்று, அவருக்கு மாம்பலம் போகத்தான் இஷ்டம். பஸ் ஸ்டாண்ட் வரை வந்துவிட்டார். ஆனுல், கடைசியில் மனசு மாறிவிட்டது. மாம்பலம் போவதற்குப் பதில் ஸினிமாக் கொட்டகைக்குச் சென்றுவிட்டார்.

ஸினிமாக் காட்சிகள் முடிந்தவுடன் கொட்டகையை விட்டுத் திரும்பும்போதுதான் புரொபஸருக்கு ஓர் அதிர்ச்சி காத்துக்கிடந்தது. வாசந்தியும் ரகுவும் கை கோத்துக்கொண்டு போவதை அவர் பார்க்க நேர்ந்தது.

ரகுநாதன் புரொபஸரைக் கவனிக்கவில்லை; ஆனால், வாசந்தி புரொபஸரைப் பார்த்துவிட்டாள். அவர் கண் களும், வாசந்தியின் கண்களும் இணைந்தபோது, அவள் உதடுகளில் புன்னகை அரும்பிற்று. அவளையறியாமல், கைகள் கூப்பி, 'நமஸ்தே' செய்தன. புரொபஸரும் பதில் வணக்கம் செய்துவிட்டு ரகுநாதன் அருகே சென்று "ஹலோ; மிஸ்டர் ரகு!" என்றார்.

"அட ராமகிருஷ்ணா. வீட்டுக்கு வருவதாகச் சொன்னாயே. இன்றுவரை வரவில்லையே. சினிமாவுக்குப் போக மட்டும் பொழுது இருக்கிறது. வாசந்திகூட 'உங்கள் நண்பர் வருவதாகச் சொன்னாரே; வரவே இல் லையே. இவ்வளவுதானா உங்கள் சிநேகிதம்? என்று கேட்டுவிட்டாள்!"

புரொபஸர் தோள்பட்டையின்மீது தன் வலக்கையை வைத்துக்கொண்டு பேசினார் ரகுநாதன். புரொபஸர் புன் முறுவல் பூத்தவண்ணம் "ரகு என்னை மன்னித்துக் கொள். அடுத்த வாரம் கட்டாயம் வருகிறேன்" என்றார். அதற்குள்தான் அவர் கண்கள் எவ்வளவு தடவை வாசந்தியின் பக்கம்போய் வந்துவிட்டன!

ரகுவும் வாசந்தியும் டாக்ஸியில் ஏறிக்கொள்ளும்வரை புரொபஸர் தியேட்டர் வாசலில் நின்றுகொண்டிருந்தார். கார் நகர்ந்து போன பிறகும் புரொபஸருக்கு அவ் விடத்தைவிட்டு வர மனமில்லை.

* * *

மறுவாரம் பிறக்கும்வரை புரொபஸர் காத்துக் கொண்டிருக்கவில்லை. மறுநாளே மாம்பலம் கிளம்பி விட்டார். அன்றுதான் எவ்வளவு நேரம் கண்ணாடிக்கு முன் நின்று கொண்டு தன்னை அலங்காரம் செய்து கொண்டார்! வெள்ளைப் 'பேண்'டிற்கு நீல நிறமுள்ள 'புஷ் சட்டை'யைப் போட்டுக்கொண்டார். அது அவருடைய சிவந்த மேனிக்கு வெகு அழகாக இருந்தது. 'சில்க்ஸாக்ஸிற்கு' மேல் 'ப்ரௌன் ஸிலிப்பான்'கள் கிரீச் கிரீச் என்று சத்தமிட, வெகு மிடுக்காக மாம்பலத்தையடைந்தார் புரொபஸர்.

ரகுநாதன் வீட்டைக் கண்டுபிடிக்க புரொபஸர் அதிகச் சிரமம் எடுத்துக்கொள்ளவில்லை. நல்ல ரோட்டின் மீதுதான் வீடு இருந்தது.

"வாருங்கள் வாருங்கள்" என்று வாசந்தி முகமன் கூறி புரொபஸரை வரவேற்றபோது, புரொபஸரின் மெய் சிலிர்த்து உடல் பூராவும் புளகாங்கிதமடைந்தது.

புரொபஸர் பிரமிப்படைந்தவராய் உள் சென்று சோபா ஒன்றில் அமர்ந்துகொண்டார். அவர் கைகளும், கால்களும் இலேசாக நடுங்கின. உடலில் உஷ்ணம் ஏறுவது போல் இருந்தது. வாசந்தி எதிரிலிருந்த சோபாவில் அமர்ந்தவுடன்தான் அவருக்குக் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது.

"ரகு.........இல்லை.........யா.........?"

"இல்லை. காலையில் சென்றவர் இன்னும் வரவில்லை. நான்கூட அவர் வரவுக்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறேன். எங்கள் உறவினர் ஒருவரின் பெண்ணுக்கு இன்று பிறந்த நாள். போக வேண்டும்."

புரொபஸர் மிரள மிரள விழித்தார். மேலே என்ன பேசுவது? பேசுவதற்குத்தான் என்ன இருக்கிறது? "வாசந்தி...என் கண்ணே" என்று வாத்ஸல்யத்தோடு அவள் கரத்தைத் தொட்டுத் தடவ அவருக்கு இஷ்டம். அப்படிச் செய்யலாமா? அல்லது செய்ய முடியுமா?

சிறிது நேரத்தில் 'கேக்'கும், நெய்யில் வறுத்த முந்திரியும் பிளேட்டில் வந்தன. அது முடிந்தவுடன் சுடச்சுட ஓவல்டின் கப்பில் வந்துவிட்டது. புரொபஸர் பானத்தை அருந்திவிட்டுக் கைக்குட்டையால் வாயைத்துடைத்துக் கொண்டார்.

"உங்களுக்கு இன்னும் மணமாகவில்லையா?" வாசந்தி இதைக் கேட்டுவிட்டு, கொவ்வைச் செவ்வாயில் முத்துக்கள் பளீரிடச் சிரித்தாள்.

புரொபஸர் தனக்குள் சிரித்துக்கொண்டே, "இல்லை ......" என்று நீட்டி முழக்கினார்.

வாசந்தியின் வீட்டில் எப்படி ஒன்றரை மணி நேரம் கழிந்தது என்று புரொபஸருக்குப் புரியவில்லை.

அன்றிரவு புரொபஸர் நிம்மதியாகத் தூங்கவில்லை. கண்களை மூட மூடச் சிந்தனை, சிந்தனை...! ஒரே சிந்தனை.

* * *

புரொபஸருக்கு இப்போதெல்லாம் மாம்பலம் தண்ணீர் பட்டபாடு. நினைத்த போதெல்லாம் மாம்பலம் போய்விடுவார். பெரும்பாலும் அவர் போகும் நேரங்களில் ரகு இருக்கமாட்டார். வாசந்திதான் புரொபஸரை வரவேற்பாள்.

மனஸ்தத்வம் எவ்வளவு அறிந்தபோதிலும் வாசந்தியைப் பற்றிப் பூர்ணமாகப் புரொபஸருக்கு ஒன்றும் தெரிந்துகொள்ளமுடியவில்லை. தன் மீது அவளுக்கு

அன்பு உண்டு என்பதைப் புரொபஸர் அறிவார். 'அந்த அன்பை என்ன பேரிட்டு அழைப்பது? அவள் என்னை விழுங்கிவிடுவதைப் போல் பார்க்கும் பார்வையை என்ன வென்று சொல்லுவது?' புரொபஸர் அவள் மனநிலையை அறிய என்னவெல்லாமோ செய்து பார்த்துவிட்டார். ஒன்றிலும் உண்மை தெரியவில்லை. ஒரு நாள் காபி டம்ளரை அவள் கையிலேயே தன் ஸ்பரிசம்படக் கொடுத்தும் பார்த்தார். வாசந்தி கூச்சமில்லாமலேயே அதைச் சாதாரணமாக வாங்கிக்கொண்டாள்.

புரொபஸருக்குப் பித்துப் பிடித்துவிடும் நிலை ஏற்பட்டிருந்தது. பாகுபோல் தளதளத்துக் கொண்டிருந்த உள்ளம் கெட்டி யடைந்தபோது அவர் ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டார். வாசந்தியை இரண்டில் ஒன்று கேட்டுவிடுவது என்பதுதான் அது.

அன்று பௌர்ணமி. இரவு வந்தவுடன் சந்திரன் பவனி வந்துவிடும். வாசந்தியின் பங்களாவிற்கு மாலையில் போவது என்று தீர்மானித்துவிட்டார் புரொபஸர். அதற்குக் காலை முதல் ஆயத்தம் நடந்தது.

பகல் போஜனம் முடிந்தவுடன் புரொபஸர் ஈஸி சேரில் சாய்ந்துகொண்டிருந்தபோது, ஒரு வாலிபன் ஹாஸ்டல் ரூமில் நுழைந்தான்.

"வணக்கம், ஸார்! நான் சௌரி ராஜன். இவ்வூர் வள்ளுவர் மன்றத்தின் காரியதரிசி. உங்களைப் பார்க்க வந்தேன்" என்றான் அவன் பணிவாக.

"நமஸ்காரம். என்ன விசேஷம்?" என்றார் புரொபஸர்.

"இன்று ஒரு பொதுக்கூட்டம். வித்துவான் சேதுபதி அவர்களைப் பேச அழைத்திருந்தோம். அவருக்கு உடல் நலம் சரியில்லை என்று தகவல் வந்தது. அதனால்......"

"அதனால் என்ன......?"

"அதனால் நீங்கள் இன்று அவசியம் மன்றத்திற்கு வந்து சொற்பொழிவு ஆற்றவேண்டும். எங்கள் தலைவர் உங்களை அழைக்கும்படி சொன்னார்......"

புரொபஸர் சிரித்துக்கொண்டார்.

"எனக்கு வருவதைப் பற்றி ஆட்சேபணையில்லை. ஆனால், மாலை ஆறுமணிக்கு வேறோர் அலுவல் இருக்கிறது. அதனால் யோசிக்கிறேன்!"

அவருக்கு மாலை அலுவல் வாசந்தியின் வீட்டிற்கு விஜயம் செய்யவேண்டும் என்பது. அதற்கே அவர் முக்கியத்துவம் கொடுக்க விரும்பினார்.

"உங்களை ஐந்தரைக்குள் விட்டுவிடுகிறோம். நீங்கள் அவசியம் வரவேண்டும்" வெற்றியின் பெருமிதப்பில் பேசினான் சௌரி.

"சரி, எதைப் பற்றிப் பேசுவது? அதைச் சொல்லவில்லையே......?"

"மன்னிக்கவேண்டும். இது ஒரு சீர்திருத்த நோக்கத்தோடு ஏற்பாடு செய்த கூட்டம். 'பிறனில் விழையாமை' என்பதைப் பற்றித் தாங்கள் பேசவேண்டும். சென்ற கூட்டத்தில் 'ஒழுக்கமுடைமை' என்பதைப் பற்றிப் பேச்சும் விவாதமும் நடந்தன."

புரொபஸருக்குச் சுரீர் என்றது. ஏககாலத்தில் தேகத்தில் ரோமாஞ்சலி உண்டாயிற்று. 'பிறனில் விழையாமை' ஆஹா எப்பேர்ப்பட்ட தலைப்பு!"

மன்றத்துக் காரியதரிசி விடைபெற்றுக்கொண்டு சென்றவுடன், புரொபஸரின் தேகம் நிலை கொள்ளாமல்

தவித்தது. பிறனில் விழையாமையைப்பற்றி என்ன பேசுவது? அதற்குத் தகுதியுடைமை இருக்கிறதா?

திருக்குறள் புத்தகத்தைப் பிரித்து முதல் குறளில் தன் நாட்டத்தைச் செலுத்தினுர் புரொபஸர்:

**பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து**
**அறம்பொருள் கண்டார்கண் இல்.**

பிறனுடைய உரிமையாகிய மனைவியை விரும்பி நடக்கும் அறியாமை உலகத்தில் அறமும் பொருளும் ஆராய்ந்து கண்டவரிடம் இல்லை. குறளின் அர்த்தம் நினைவில் தோய்ந்தபோது புரொபஸரின் கண்கள் கலங்கின. உள்ளம் நெகிழ்ந்தது. கை கால்கள் மறத்து விட்டன.

மாலை நெருங்க நெருங்கப் புரொபஸர் சிலையாகிவிட்டார். குறள் அவரை அப்படி ஆக்கிவிட்டது! மன்றத்தில் கூட்டம் அதிகமில்லாவிட்டாலும், பொறுக்கினுற்போல் சில அறிவாளிகள் இருந்தார்கள். புரொபஸர் 'பிறனில் விழையாமை' பற்றி வெகு அழகாகப் பேசினுர். பக்தி மார்க்கம், ஞானமார்க்கம் இவை யாவும் கலந்திருந்தன பேச்சில். ஆழ்ந்த ஞானமும், பரந்த அனுபவமும் பேச்சில் இருந்ததை எல்லோரும் புரிந்துகொண்டார்கள். இளைஞன் ஒருவர் இப்படிப் பேசியதைக் கண்டு முதியவர்கள் பெருமை யடைந்தார்கள்.

கச்சிதமாகச் சொற்பொழிவை முடித்துக்கொண்டு புரொபஸர் மாம்பலம் கிளம்பினுர். சொற்பொழிவில் மிளிர்ந்த கருத்துக்களும், தான் நிஜ வாழ்வில் செய்யும் செய்கையும் அவர் உள்ளத்திலே துவந்த யுத்தம் செய்தன. "பிறன் மனைவியைப்பற்றி எண்ணுதே அது உன் உரிமையன்று. அறமும் பொருளும் கண்ட அறிஞர்களிடம் அவ்

வழக்கமில்லை'' என்று வள்ளுவர் சொன்னார். உள்ளம் அதை ஏற்க விரும்பியது. வள்ளுவர் கருத்துக்களோ சிரித்தன, உள்ளத்திலே சிக்காமல் தூர தூரச் சென்றன. புரொபஸர் தேகம் தள்ளாடக் கண் இமைகள் ஒரே நிலையில் நிற்க, வாசந்தியின் பங்களாவை அடைந்தார்.

பங்களாவில் சுடுகாட்டு மௌனம். ஹாலில் ஒரே விளக்கு. ஏனோ பயங்கரமாக எரிந்தது. சுவரில் மாட்டியிருந்த ஒரு பெரிய அளவு மனிதப் படம் பிசாசுபோல் காட்சியளித்தது. புரொபஸர் ஸோபாவில் அமர்ந்தவுடன் வீட்டு வேலைக்காரன் வந்தான். ''அம்மா உங்களை உட்காரச் சொன்னாங்க, ஸார். டிரஸ் பண்ணிக்கிட்டு இருக்காங்க'' என்றான்.

புரொபஸர் தன் தலையில் கையை வைத்துக்கொண்டார். இதயம் 'டக் டக்' என்று கடிகாரத்துடன் போட்டியிட்டது.

மணி ஏழு அடித்து ஓய்ந்தவுடன் வேலைக்காரன், ''ஓவல்டின் வேணுங்களா, பால் வேணுங்களான்னு அம்மா கேக்கச் சொன்னாங்க'' என்றான்.

புரொபஸர் ''ஏதாவது கொடு'' என்றார். சுடச்சுடப் பால் வந்தது.

மணி ஆகிக்கொண்டிருந்தது. வாசந்தி வரவே இல்லை. புரொபஸர் வேலைக்காரனைக் கூப்பிட்டு, ''இன்னும் அம்மா என்ன பண்ணிகிட்டு இருக்காங்க? ஊரில் இல்லையா?'' என்று கேட்டார்.

''ஐயா ஊரில் இல்லைபோல்தான் இருக்குதுங்க. அம்மா கந்தனை விரட்டிக்கிட்டு இருக்காங்க. அவன் தலவாணி மெத்தை இதுக்கெல்லாம் உறை மாத்தவே இல்லிங்க. அதுக்காகத்தான் கூவிக்கிட்டு இருக்காங்க.''

சூழ்நிலைகளின் சாதகத்தை உணர்ந்தபோது, குறளாசிரியரும், பிறனில் விழையாமை கருத்துக்களும் மக்கிப்போய்விட்டன. அதில் புதிய உரம் பிறந்தது. வாசந்தி அதில் அலங்கார சௌந்தர்யையாய்க் காட்சி கொடுத்தாள். புரொபஸர் அவள் வரவை எதிர்நோக்கியிருந்தார்.

அரைமணிநேரம் கழிந்தது. மறுபடியும் வேலைக்காரனே வந்தான். இப்போது அவன் கையில் பெரிய அளவில் 'பைண்ட்' செய்யப்பட்ட ஒரு புத்தகம் இருந்தது. புத்தகத்தைப் புரொபஸர்க் கையில் கொடுத்து "அம்மா உங்களை இந்தப் புத்தகத்தைப் படிச்சுக்கிட்டு இருக்கச் சொன்னுங்க. இதோ வந்தூடருங்களாம்" என்று சொன்னுன்.

புரொபஸர் புத்தகத்தை வாங்கிப் பிரித்தார். அது திருக்குறள். பரிமேலழகர் எழுதிய விளக்க உரையோடு இருந்தது. புத்தகத்தின் முனையில் இருந்த அடையாளச் சீட்டு நடுவில் ஒரு பக்கத்தில் செருகப்பட்டிருந்தது. சீட்டு வெளிப்புறம் நீட்டிக்கொண்டிருந்ததிலிருந்து அது தெரிந்தது.

புரொபஸர் தம் கையால் பிரிப்பதற்குள் புத்தகப் பக்கங்கள் தாமாக அந்தப் பக்கம்வரை பிரிந்துகொண்டன. என்ன அதிசயம்! அந்த அதிகாரம் 'பிறனில் விழையாமை!'

**பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து**
**அறம்பொருள் கண்டார்கண் இல்.**

முதல் பாட்டிலே தொக்கி நின்ற அர்த்தங்களும் கருத்துக்களும் பளிச் பளிச்சென்று புரொபஸரின் உள்ளத்தின் திரைகளில் மின்னின, சில சமயங்களில் அவை சுரீர் சுரீர் என்று முட்களைப்போல் இதயத்தைத் தைத்தன.

புரொபஸர் கண்களில் கண்ணீர் மாலைமாலையாக வழிந்தது. "மாலையில் நான் என்ன பேசினேன்? இப்போது எப்படி நடந்துகொண்டேன்? வாசந்தி, நீ என் கண்களைத் திறந்துவிட்டாய். ஆஹா, குறளுக்குத்தான் எப்பேர்ப்பட்ட சக்தி!"

புரொபஸரின் மனம் அலைபோல் கொந்தளித்தது. கையிலிருந்த புத்தகத்தை டீபாயில் வைத்துவிட்டு மெதுவாக எழுந்திருந்தார். அவர் கால்கள் அவரை வாசல் பக்கம் தானாக இழுத்துச் சென்றன.

"ராமகிருஷ்ணன், எங்கேக் கிளம்பி விட்டாய்?" என்று குரல் வந்தது. புரொபஸர் திரும்பிப் பார்த்தார். மாடிப் படிக்கட்டொன்றில் ரகுவும் வாசந்தியும் நின்று கொண்டிருந்தார்கள்.

அவர்கள் இருவரையும் பார்த்தவுடன் புரொபஸருக்குக் கண்ணீர் மடை திறந்த வெள்ளம் போல் பிரவாகமெடுத்தது.

"ரகு! என்னை மன்னித்துக்கொள்" என்றார் புரொபஸர்.

"ராமகிருஷ்ணன், உண்மையில் நீதாண்டா பேராசிரியன். எவனுக்குப் படித்தவுடன் புத்தி வருகிறது? ஆனால் எனக்கு மட்டும் தெரியும். அதனால்தான் வாசந்தி குறளில் அடையாளமிட்டு அனுப்பினாள்."

"ரகு...ரகு!" ஏதோ பேச வாயெடுத்தார் புரொபஸர்.

"ராமகிருஷ்ணன், பேசுவதற்கு இப்போது ஒன்றுமே இல்லை. நிம்மதியாக நீ ஹாஸ்டலுக்குப் போ. இதுவரை நடந்தவற்றை வாசந்தி மறந்துவிட்டாள். நீயும் மறந்துவிடு. நான் எப்போதோ மறந்துவிட்டேன்."

'கிரீச் கிரீச்' என்று பூட்ஸ் சப்தம் கேட்டது. புரொபஸர் ராமகிருஷ்ணன் ஹாஸ்டலை நோக்கி நடந்துகொண்டிருந்தார்.

# விஷ வைத்தியம்

'அன்பே சிவம்' என்று அழகாக எழுதப்பட்டக் கரும்பலகையைப் பார்த்துக்கொண்டே உள்ளே போனல், முதல் அறையில் வைத்தியர் நாகலிங்கத்தைக் காணலாம். நவீன காலத்தில் நாகரிகமாக வைத்திய முறைகள் எவ்வளவோ முன்னேறியபோதிலும், அவர் பண்டைய சாத்திரப்படி மூலிகைகளையும் செந்தூரங்களையும்தான் கலுவத்தில் அரைத்துக் கழக்கோடி யளவு நோயாளிகளுக்குக் கொடுத்துக்கொண்டிருந்தார்; பத்திய முறைகளைச் சவிஸ்தாரமாய் எடுத்துச் சொல்லி அனுஷ்டிக்கச் செய்வார். வைத்திய முறைப்படி சிகிச்சைகள் செய்தபோதிலும் அதற்கு அப்பாற்பட்ட தெய்வ யத்தனத்தில்தான் வியாதிகள் சொஸ்தமாகின்றன என்று கூறி ஆண்டவனை வழிபடச் சொல்லுவார்.

நாகலிங்கத்தின் கைராசியோ, அல்லது அவர் நாட்டு வைத்தியத்தில் கையாண்டு வந்த முறையோ அவர் அந்த

ஊரிலேயே தலைசிறந்த வைத்தியர் என்ற பெயரைச் சொற்ப காலத்திலேயே எடுத்துவிட்டார். இல்லாவிட்டால், பத்து வருஷ காலத்தில் இரண்டு மெத்தை வீடுகளும், ஐந்து வேலி நிலமும் அவரால் வாங்கியிருக்க முடியுமா?

நாகலிங்கத்திற்கு நாற்பது வயது இருக்கும். கட்டை குட்டையாக இருப்பார். வழுக்கை விழுந்த தலையும் நெற்றியில் திருநீறும் கழுத்தில் உத்திராட்ச மாலையும் அவரை வைத்திய நிபுணர் என்றே நிரூபணம் செய்தன. குடும்ப பாரம் அதிகமில்லாத அவருக்கு வாழ்க்கையில் கவலைப்படுவதற்கு ஒன்றுமே யில்லாமல் இருந்தது. தானுண்டு, தன்னுடைய தொழில் உண்டு, அதில் வரும் வரும்படி உண்டு என்றே காலத்தை ஓட்டிவந்தார். தனக்கிருந்த ஒரே மகளைத் தகுந்த இடத்தில் மணம் முடித்துவிட வேண்டும் என்கிற ஒரே கவலைதான் அவருக்கு. கையில் ரொக்கமாகப் பணத்தை வைத்துக் கொண்டு இதற்காகக்கூட அவர் கவலைப் பட்டுக்கொண்டிருக்க வேண்டியதில்லை.

தனம், நாகலிங்கத்தின் ஒரே பெண். கொடிபோல் இருப்பாள். அவள் தன்னுருக் கொண்டு பிறக்காமல் தாய் உருக்கொண்டு பிறந்ததில் நாகலிங்கத்திற்குப் பரம திருப்தி. கல்யாண வயதை எட்டிப் பிடித்துக்கொண்டிருந்த தனம் வளர்ச்சியில் பூரிப்புப் பெற்றிருந்ததில் ஆச்சரியமில்லை.

## 2

இரண்டு வருஷங்களாகத்தான் நாகலிங்கம் தனத்தின் கல்யாணத்தைப்பற்றிய முயற்சிகளில் தீவிரமாகக் கவனத்தைச் செலுத்திக்கொண்டிருந்தார். எனினும், ஒன்றும் உருவாகவில்லை. நான்கும் சேர்ந்த இடத்தில் தன்

மகளைக் கொடுக்கவேண்டும் என்கிற ஆசை அவருக்கு. அப்படிப்பட்ட இடம் அமையவில்லை. 'அரை மனத்துடன் கல்யாணத்தை முடிப்பானேன், பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்ற போக்கிலேயே காலத்தைத் தள்ளிக் கொண்டுவந்துவிட்டார். ஆனால், இந்த வருடம் எப்படியும் முடித்துவிட வேண்டும். நாலுபேர் வந்து போய்க் கொண்டிருக்கிற வீட்டில் வயதுவந்த பெண்ணை வைத்துக் கொண்டிருப்பது உயர்ந்த பண்புக்கு அழகன்று. மேலும், தனம் முன்மாதிரியாகவா இருக்கிருள்? அவள் முகபாவத்தில் எவ்வளவு மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன? 'கலகல' வென்று அவள் சிரித்துத்தான் எவ்வளவு காலமாய் விட்டது?

நாகலிங்கத்தின் திட்டம் தனத்தைக் கணபதியின் மூத்த மகன் பரஞ்சோதிக்குக் கொடுத்துவிட வேண்டும் என்பதுதான். கணபதியின் குடும்ப வைத்தியர் நாகலிங்கம். அந்தக் குடும்பத்திற்கே நாகலிங்கத்தின்மீது அத்தியந்த அன்பு. கணபதியின் உயிரை மூன்று முறைகள் எமன் வயிலிருந்து மீட்டுக்கொண்டு வந்த பெருமை அவரையே சேர்ந்தது. ஆதலால், கணபதியின் குடும்பத்தாருக்கு, நாகலிங்கத்தின்மீது ஒருவித பக்தி என்று சொல்வதே மிகப் பொருந்தும்.

பரஞ்சோதி இலட்சணமான பையன். பி. ஏ. வரை டித்திருந்தான். தனத்திற்கு அவன்தான் ஏற்ற கணவன் என்று நாகலிங்கம் தீர்மானித்து வைத்திருந்தார், இரண்டொரு முறைகள் பட்டும் படாததுமாக இதைப் பற்றிப் பிரஸ்தாபித்தபொழுது அவர்கள் மனப் போக்குகூடப் புரிந்திருந்தது நாகலிங்கத்திற்கு. எனவே காரியம் கை கூடுவதில் தடை ஏற்படாது என்று எண்ணிக்கொண்டிருந்தார்.

அன்று கிருத்திகை. ஆண்டவன் சந்நிதியில் அர்ச்சனைகள் முடித்துக்கொண்டு நாகலிங்கம் கணபதியின் வீட்டைச் சமீபித்தார். வரும் வழியில்தான் அவர் இல்லம். அங்கே இறங்கி 'நாலு வார்த்தைகள்' பேசிவிட்டுவரலாம் என்ற எண்ணத்திலேயே வண்டியை அவர் வீட்டிற்கெதிரே நிற்கச் செய்தார்.

சூழ்நிலை அன்று வெகு நன்முக அமைந்திருந்தது. கணபதி, அவர் மனைவி, அவர் தாயார் எல்லோரும் முன் பக்கத்து ஹாலில் அப்போது ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். கணபதி விசுப்பலகையில் உட்கார்ந்திருந்தார். நாகலிங்கம் வருவதைப் பார்த்தவுடன், "வாங்க, வாங்க வைத்தியரே, ஏது இந்தப் பக்கம். ரொம்ப அபூர்வமா இருக்கு? வீட்டில் எல்லோரும் சுகம்தானே?" என்று முகமலர்ச்சியுடன் வரவேற்ருர் கணபதி.

நாகலிங்கம் பதில் வணக்கம் தெரிவித்துவிட்டு, "கிருத்திகை யல்லவா? கோவிலுக்கு வந்தேன்; அப்படியே உங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று இறங்கினேன்" என்று சொல்லிக்கொண்டே விசுப்பலகையில் அமர்ந்தார்.

கணபதி தன் அருகில் இருந்த வெற்றிலைப் பெட்டியை நாகலிங்கம் பக்கம் நகர்த்தி "வெற்றிலை போடுங்க" என்று உபசாரம் செய்தார்,

பிறகு லோகாபிராமமாக இருவரும் ஏதேதோ பேசிக்கொண்டு போனுர்கள். அவற்றில் மருந்து வகைகளும் பத்திய முறைகளும்தாம் அதிகமாக அடிபட்டன என்று சொல்லவேண்டியதில்லை.

கடைசியில் கணபதியின் தாயார் பேசினுள்: "என்ன வைத்தியர் ஐயா, தனத்திற்கு இந்த வருஷமும் கலியாணம்

செய்யப்போகிறதில்லையா? எங்கள் பரஞ்சோதிக்கு இந்த வருஷம் எப்படியும் கலியாணம் செய்துவிடுவது என்று தீர்மானிச்சுட்டோம். உங்க கிட்டதான் வரணும். 'நாள் பாரு நாள் பாரு'ன்னு சொன்னு இவன் மீனமேஷம் பாத்துக்கிட்டு இருக்கான்."

"அதற்கென்னம்மா? கிணத்துத் தண்ணியை வெள்ளமா கொண்டுகிட்டுப் போயிடும்? நம்ம குல வழக்கப்படி பெண் கேக்க நீங்க வரணும்னுட்டு நான் இதுவரை காத்துக்கிட்டு இருந்தேனே யொழிய, எனக்கு இது விஷயத்திலே சிரத்தையில்லாமலில்லை. நாளைக்கே புரோகிதர் ஐயாவைக் கூப்பிட்டு வேண்டியதைச் செய்துட்டா போறது."

"ஆமாம், ஆமாம். சீக்கிரம் செய்யாட்டி பின்னாலே நம் உறவு மனுஷர்கிட்டே மனஸ்தாபம் வரும்போல இருக்கு. பரிசம் போல உறவுக்குள்ளே 'நான் நீ'ன்னு காத்துக்கிட்டு நிக்கறுங்க" என்று சொல்லி நிறுத்தினுள் அந்தப் பெரிய அம்மாள்.

இந்தப் பேச்சு வார்த்தையில் கொஞ்சம்கூடச் சம்பந்தப்படாமல் இருந்தாள் கணபதியின் மனைவி. அவளுடைய அண்ணனுடைய பெண்ணுக்கே பரஞ்சோதியைக் கொடுக்க வேண்டும் என்கிற எண்ணம் அவளுக்கு. அதற்குப் புறம்பாக இங்கேக் கலியாணப் பேச்சு நடக்கும் போது எப்படிச் சகிப்பாள் அவள்? வீட்டுக்குப் பெரியவள், மாமியார் பேசுவதனுலேயே சும்மா இருந்து விட்டாள்.

அதற்குப் பிறகு நாகலிங்கம் அங்கு அதிகமாகத் தங்கவில்லை. விடை பெற்றுக்கொண்டார். போகும் போது கணபதி வாசற் பக்கம்வரை வந்தார். ஏதோ ரகசியம் பேசுவதற்காகத்தான் உடன் வருகிறுர் என்று

நம்பியிருந்தார் வைத்தியர். ஆனால், ரேழிப் பக்கம் வந்த கணபதி, "வைத்தியரே நான், சொன்னேனே அந்த இடத்தில் வலி தாளவே முடியவில்லை. இன்னும் கொஞ்சம் சுச்ரக் கஷாயம் அனுப்பி வைக்கிறீங்களா?" என்று கேட்டார் மெதுவான குரலில்.

நாகலிங்கத்திற்குப் பெருத்த ஏமாற்றமாகப் போய் விட்டது. கலியாண விஷயமாக ஏதாவது பேசுவார் என்றுதான் அவர் நினைத்தார். வைத்திய விஷயத்தால் அவர் பேசியவுடன், வாய் திறவாமல் தலையை ஆட்டி விட்டு வண்டியில் ஏறிக்கொண்டார்.

## 3

இதற்குப் பிறகு நாகலிங்கம் சும்மாயிருக்கவில்லை. ஒரு நல்ல நாள் பார்த்துக் கலியாணத்தை நிச்சயம் செய்து விடவேண்டும் என்ற எண்ணத்தில் சமீபத்தில் ஏதாவது நாள் இருக்கிறதா என்று புரோகிதரை விட்டுப் பார்க்கச் சொன்னார்.

மனப் பொருத்தம் இருந்தால் தினப் பொருத்தங் கூடவா கிடையாது? மறுவாரம் புதன்கிழமையே நல்ல முகூர்த்த நாளாய் அமைந்திருந்தது. எனவே, அன்றே கலியாணத்தை நிச்சயம் செய்துவிடலாம் என்று கணபதிக்குத் தெரிவித்துவிட்டார். முறைப்படி அன்று காரியங்களைச் செய்துவிடலாம் என்றும், கலியாண தினத்தை என்று வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாமென்றும், பரஞ்சோதியை வழக்கப்படி பெண்ணைப் பார்க்க அழைத்துவரும்படியும் தகவல் அனுப்பிவிட்டார்.

நாகலிங்கத்தைவிட அவர் மனைவிக்கு இந்த விவாகத்தில் பரமதிருப்தி. உயர்ந்த குடும்பத்தில் சம்பந்தம் என்றவுடன் அவள் தோள்கள் பூரித்தன. கட்டுக்கடங்காத

அலைகள் எழுந்து ஓய்ந்து அமைதி பரவுவதைப் போல் இருந்தது அவளுக்கு.

தனத்தைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. தந்தையுடன் கோயிலுக்குப் போகும் சமயங்களில், வாயிலிலே நின்றுகொண்டிருக்கும் பரஞ்சோதியைக் கடைக்கண்ணால் அவள் எத்தனையோ முறை பார்த்திருக்கிறாள். அவனுக்கே வாழ்க்கைப்படப் போகிறோம் என்பதை நினைக்கும்போதே அவளை யறியாமலேயே அவள் உள்ளம் கிளு கிளுத்தது.

நாகலிங்கத்தின் குடும்பம் இந்த மண வெழுச்சியில் திளைத்திருந்தபோது கணபதி வீட்டு ஆள்வந்தான். வந்தவன் கையிலிருந்த சீட்டை அவரிடம் கொடுத்தான். நாகலிங்கம் கடிதத்தைப் பிரித்தார்.

"எதிர்பாராத சில சந்தர்ப்பங்களினால் புதன்கிழமை நிச்சயதார்த்தம் வைத்துக்கொள்ள முடியவில்லையாதலால், அதைப் பின்பு ஒரு தேதிக்கு மாற்றி வைத்துக்கொள்வோம். நேரில் முழுத் தகவலும் தெரிவிக்கிறேன்" என்று கணபதி கடிதம் எழுதியிருந்தார்.

கடிதத்தைப் படித்தவுடன் நாகலிங்கத்தின் முகபாவத்தில் மாறுதல் ஏற்பட்டது. பேய் அறைந்ததைப் போல் தூணில் நின்ற நிலையிலேயே சாய்ந்துவிட்டார்.

மறுநாள் நாகலிங்கம், கணபதியைச் சந்தித்துப் பேசிய பின்தான் விஷயம் முழுவதும் தெரிந்தது.

"என்ன, கணபதி! கடைசியில் நாளைத் தள்ளிப் போட்டுட்டீங்க! சட்டுப்புட்டுன்னு முடிச்சிடலாம்னு பார்த்தா...தள்ளிக்கிட்டேபோகுதே"என்றார் நாகலிங்கம்.

"இல்லே, வைத்தியரையா! இதுலே பல தொல்லைகள் இருக்கு; எனக்கும் என் தாயாருக்கும் உங்க சம்பந்

தத்திலே இஷ்டம்தான். ஆனு...என் மனைவிக்குத்தான் விருப்பம் இல்லை. அதனுலேதான் விவரம் முழுவதையும் நேரிலே சொல்லலாம்ன்னுட்டு உங்களை வரச் சொன்னேன்."

"ஏன் சம்மதமில்லையாம்? குணமில்லையா? குலமில்லையா?"

"சேச்சே! அப்படியெல்லாமில்லை ஐயா! அவள் அண்ணன் ஒருவன் இருக்கான். அவன் மவளை இங்கே கட்டிக் கொடுத்துடணும்னு ஒத்தக்காலிலே நிக்கருன். நேத்திக்குக்கூட இங்கே வந்தான். நம்ப விஷயத்தைச் சொன்னேன். ஒரே ரகளையாயிடுச்சு. என் பெண்ணைவிட்டுட்டு அதெப்படி வெளியிலே போவீங்கன்னு சண்டை பிடிக்க ஆரம்பிச்சுட்டான். கேக்கணுமா? கூட அவன் தங்கையும் சேர்ந்துகிட்டா. அதனுலேதான் பின்னுடி பார்த்துக்குவோம்னு கடிதாசி எழுதிட்டேன்."

"அப்படீன்னு நான் வேற எங்கேயாவது பார்த்துக்கிடவேண்டியதுதானு?" என்று நாகலிங்கம் கேட்ட கேள்விக்குக் கணபதி பதில் சொல்லவில்லை. அங்கு வந்த அவர் மனைவிதான் பதில் சொன்னுள். "ஆமாம் வைத்தியர் ஐயா! வேறே இடம் பார்க்கவேண்டியதுதான். நேத்தே நான் கையடிச்சு என் அண்ணுத்தைக்குச் சொல்லிப்பிட்டேன், என் பிள்ளை உன் மருமவன்தான்னு."

வைத்தியருக்கு அந்த இடத்தில் பிறகு இருப்பே கொள்ளவில்லை. பதில் என்ன பேசுவது என்றுகூட அவருக்குத் தெரியாமல் போய்விட்டது.

"என்ன வைத்தியர் ஐயா! மனத்தாங்கலா? கலியாணம் நாம் செய்துவைக்கிறதில்லை. கடவுள் செய்துவைக்கிருரு என்பதுதான் சித்தாந்தம், நாம் சொல்லறபடிதான்

எல்லாம் நடக்குதா? கவலைப்படாதீங்க, பிராப்தப்படி எல்லாம் நடக்கும்'' என்று கூறிவந்த கணபதி சட்டென பேச்சைத் திருப்பி "வைத்தியரே! மாரெல்லாம் நேத்தி முதல் ஒரே வலி. ஏதாவது மருந்து கொடுத்து அனுப்புங்களேன்'' என்றார்.

மார்புவலி என்றவுடன் வைத்தியரின் கவனம் 'சட்' டென்று கலைந்தது. ஒரு முறை கணபதியின் விலா எலும்புகளைத் தட்டிப் பார்த்துவிட்டு மருந்து அனுப்புவதாகச் சொல்லிவிட்டு வெளியே வந்துவிட்டார்.

வண்டியில் போகும்போது அவர் உள்ளம் தாமரை இலைத் தண்ணீர் போல் தத்தளித்தது. 'வீட்டில் இந்தச் சமாசாரத்தைச் சொன்னால் அவர்கள் எப்படி வருத்தப் படுவார்கள்! தனம் இந்த அதிர்ச்சியைத் தாங்கவே மாட்டாளே! ஆண்டவனே, உன் நியதியில்தான் எவ்வளவு அற்புதம்! கொடுக்கிறாய், பிடுங்கிக்கொள்கிறாயே!'

## 4

அதற்குப் பிறகு கலியாணப் பேச்சு முற்றுப்புள்ளி வைத்தது போல் நின்றுவிட்டது. கணபதியின் வீட்டுக்குச் சிகிச்சைக்காக நாகலிங்கம் அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தாரே யொழிய இது விஷயமாக அவர்களும், பேசவில்லை; இவரும் வாயைத் திறக்கவில்லை.

அன்று நாகலிங்கம் தான் கொண்டுவந்திருந்த தைலத்தைக் கணபதியின் மார்பிலும் விலாவிலும் தடவிக் கொண்டிருந்தபோது, கலியாணத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்தார் கணபதி.

"வைத்தியர் ஐயா, கடைசியில் அவள் கட்சி தான் ஜெயிச்சுது. பரஞ்சோதிக்குக் கலியாணம் செய்யத் தீர்மானிச்சுட்டோம். நேத்துத்தான் நிச்சயம் ஆச்சு. கலியா

ணத்துக்கு நீங்க அவசியம் வரணும். அதுக்குள்ளே இந்த வலியையும் குணப்படுத்திடணும் தெரிஞ்சுதுங்களா?" என்றார் மெதுவாக.

நாகலிங்கத்திற்குக் கணபதியின் பேச்சு 'சுரீ' ரென்று தைத்தது. எனினும் சமாளித்துக்கொண்டார்.

"நிச்சயமாயிட்டுதா? பயப்படாதீங்க அதுக்குள்ளே வலியைப் பறக்கடிச்சிடமாட்டேனு! கலியாணம் எந்த ஊரிலேயோ?"

"எந்த ஊரில் இருந்தா என்ன? நீங்க வராமே கலியாணம் நடந்துடுமா? எனக்கு உங்க பேரிலே இருக்கிற விசுவாசம் உங்களுக்கு நல்லாத் தெரியும். எந்தக் காரியம் இருந்தாலும் விட்டுட்டு எனக்காக நீங்க அவசியம் வந்து தான் ஆகணும்."

நாகலிங்கம் வீடு வந்து சேர்ந்தபோது அவருக்குச் சப்த நாடியும் ஒடுங்கிவிட்டதைப் போன்ற உணர்வுதான் ஏற்பட்டது. அவர் போட்ட திட்டங்கள் எல்லாம் எப்படித் தவிடுபொடியாய் விட்டன! 'தனத்திற்கு அதிர்ஷ்டமில்லை. அவ்வளவுதான்?' என்று உருகினார் அவர்.

இரண்டு நாள் கழித்து, வைத்தியர் வீட்டில் இல்லாத போது கலியாண அழைப்பிதழ் வந்திருந்தது. தனம் அதைப் பிரித்துத் தன் தாய்க்குப் படித்துக் காட்டிய போதுதான், பரஞ்சோதி தனக்கில்லை என்று அவளுக்குத் தெரிந்தது. பிறகு அவள் அதைப் படிக்கவில்லை. அப்படியே போட்டுவிட்டு உள்ளே போய்விட்டாள். சற்று நேரம் கழித்து அவள் விசித்து விசித்து அழும் சப்தம்தான் கேட்டது.

"தனம்! இதுக்கு ஏனம்மா அழுவரே! அவங்க அவங்க கொடுத்துவச்சபடிதான் நடக்கும்" என்று சாந்தப்படுத்தினாள் அவள் தாயார்.

அன்று இரவு நாகலிங்கம் வீடு வந்தவுடன் பத்திரிகை யைப் பிரித்துப் படித்தார். படித்தவுடன் அவர் கண்கள் கோவைப் பழம் போல் சிவந்துவிட்டன. உள்ளம் துடி துடித்தது.

"முதுகெலும்பு இல்லாத பயல்! பெண்சாதி சொல்லு கிருள் என்று சம்மதித்துவிட்டான்! சுய மூளை இல்லாத வன்; எனக்கு எவ்வளவு உறுதி கொடுத்தான். உயிரைக் காப்பாத்தினவன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யாத இவன் நரகத்தில்தான் விழப்போகிருன்" என்று கத்திவிட்டார். ரத்த ஓட்டமே நின்று 'தள தள' வென்று தேகம் முழுவ தும் கொதி வருவதுபோல் இருந்தது அவருக்கு.

இந்த மன எழுச்சியில் இராத் தூக்கமேது அவருக்கு. புரண்டுப் புரண்டு படுத்துக்கொண்டிருந்தார். அப்போது வானத்தில் பூர்ண சந்திரன் காய்ந்துகொண்டிருந்தான். நிலவு சாளரத்தின் வழியே நேர்க்கோணத்தில் விழுந்திருந் தது. நிலவின் வெளிச்சத்தில் தொலைவில் படுத்திருந்த தனம் நாகலிங்கத்தின் திருஷ்டியில் பட்டுக்கொண்டிருந் தாள்.

அவள் தூங்கிக்கொண்டிருந்தாளே யொழிய, நிம்மதி யான தூக்கமா அது? இடையிடையே நீண்ட பெருமூச் செழுந்து அவள் உள்ளத் துணர்ச்சியைப் பிரதிபலித்தது. பேச வைத்தால் அவை எவ்வளவோ பேசும்!

நாகலிங்கத்திற்கு உண்மையில் பைத்தியம் பிடித்து விடும் போலாகிவிட்டது. 'இந்த இடம் விட்டால் மற் ருென்று' என்று சாந்தப்படுத்திக்கொள்ள அவரால் முடியவில்லை. 'இது எப்படி முடியாமல் போயிற்று? இனி மேல் முடிக்க முடியாதா?' என்ற ரீதியில் எண்ணிக் கொண்டு போனுர் அவர்.

இரண்டு நாட்கள் தாண்டினால் கலியாணம். அதற்குப் பிறகு தனமும் தானும் பரஞ்சோதியை அடியோடு மறந்துவிடவேண்டியதுதான். இந்த நிலையில் கல்யாணத்தை நிறுத்துவது எப்படி? ஆம், நிச்சயமாகக் கலியாணம் நிற்க வேண்டியதுதான். தனத்தைக் கலியாணம் செய்துகொள்ளாத பரஞ்சோதி என்றுமே பிரமசாரியாக இருக்கவேண்டியதுதான்! அவன் தாய்......சீச்சீ...! அவள் என்ன மனுஷியா?—தனத்தை—அழகுத் தெய்வத்தை—மருமகளாக அடைய அவள் எவ்வளவு தவம் செய்திருக்கவேண்டும்! நெஞ்சில் ஈவு, இரக்கம், மனிதத் தன்மை எதுவுமின்றிப் பெரியவரின் மனத்தை எப்படி மாற்றிவிட்டாள்? நல்லவரின் மனத்தில் விஷம் கலந்துவிட்டாள், அதற்குரிய தண்டனையை அவள் அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.

நாகலிங்கத்திற்கு உடலெல்லாம் வியர்த்தது, சொட்டச் சொட்ட நனைந்துவிட்டது. எண்ண அலைகள் தாண்டித் தாண்டிப் போயிற்றே யொழிய கரையை அடையும் வழியை அவை காணவில்லை. அதை மடக்கி நிறுத்தவும் அவரால் முடியவில்லை.

## 5

மறுநாள் பொழுது விடிந்தவுடன் கணபதியின் வீட்டுப் பையன் வந்தான். வழக்கமாகக் காலை வேளையில் தான் மருந்துவாங்க அவன் வருவான்.

அன்று காலை அவன் வந்தவுடன் நாகலிங்கம் சூரணமொன்றைக் கொடுத்துவிட்டு மாலையில் வந்து ஒரு லேகியம் வாங்கிப் போகச் சொன்னார்.

இப்போதுதான் நாகலிங்கத்திற்குப் பைத்தியம் முற்றிற்று. அதாவது தான் செய்யவேண்டிய காரியங்களுக்கு எதிரிடையாக அவர் ஏதேதோ செய்துகொண்டுபோனார்.

கணபதிக்கு அவசியம் லேகியம் கொடுக்க வேண்டியதுதான்! அந்த லேகியம் ஒன்றுல்தான் பரஞ்சோதியின் கலியாணத்தை நிறுத்த முடியும்! அவன் தாயின் மனோபீஷ்டத்தில் மண்ணை வாரிப்போட முடியும்!

ஐயோ! நாகலிங்கத்தின் இதயம்தான் எப்படிக் கல்லாய்ப் போய்விட்டது! தான் ஒரு வைத்தியர் என்பதை மறந்து கொலைக் குற்றம் செய்யவல்லவோ துணிந்து விட்டார்.

மாலைவேளை நெருங்கிக்கொண்டிருந்தது. கலுவத்தில் மருந்துச் சாமான்களைப் போட்டு அரைத்துக்கொண்டிருந்தார் வைத்தியர். கடைசியில் இம்மியளவு விஷப்பச்சிலையொன்றின் சாற்றை இரண்டு மூன்று துளிகள்—மாபெரும் காரியங்கள் செய்துவிடும்—அதை மருந்தோடு மருந்தாகக் கலந்துவிட்டார் வைத்தியர்! லேகியம் தயாராகிவிட்டது. எப்பேர்ப்பட்ட லேகியம்? கணபதியைப் பரலோகம் அனுப்பி, அவர் மனைவியை விதவைக் கோலத்துக்கு உள்ளாக்கி, நடக்கவிருக்கும் கலியாணத்தை நிறுத்தி, இன்னம் என்னென்னவோ காரியங்களைச் செய்யப்போகும் மகத்தான லேகியம்!

சொல்லி வைத்தபடி பையன் வந்தான். அன்று கணபதியின் உடல் நிலை சீராக இல்லை என்று சொல்லிக் கொண்டுதான் வந்தான் அவன். நாகலிங்கம் லேகியத்தைப் பையன் கையில் கொடுத்து அனுப்பிவிட்டார்.

அவர் கைகள் அப்போது எப்படி நடுங்கின? மனத்தில் ஆயிரமாயிரம் எண்ணங்கள் எப்படித் தோன்றி மறைந்தன? பையன் இவற்றையெல்லாம் கவனித்தானு? லேகியத்தை வாங்கிக்கொண்டு மின்னல் வேகத்தில் மறைந்துவிட்டான்.

பையன் வீட்டைத் தாண்டிய பின்புதான் நாகலிங்கத்தைக் 'கடமை உணர்ச்சி' தாக்க ஆரம்பித்தது. "வைத்தியர் என்ற முறையில் அமைத்துக்கொண்ட எல்லைக் கோட்டை எவ்வளவு தூரம் தாண்டிவிட்டாய்! இனி உனக்கு விமோசனம் உண்டா? பஞ்சமாபாதகங்கள் எல்லாவற்றையும் அல்லவா மிஞ்சிவிட்டது, உன் செய்கை!" என்று ஈட்டி கொண்டு தாக்கிற்று மனச்சாட்சி.

வைத்தியருக்குத் தேகம் இருப்புக்கொள்ளவில்லை. ஓடிப்போய் லேகியத்தைப் பையனிடமிருந்து பிடுங்கிக் கொண்டுவந்துவிடலாமா என்று கூடத்தோன்றிற்று. உள்ளத்தே வேதனை வாட்டக் கூண்டிலடைபட்ட புலியைப் போல் இப்படியும் அப்படியும் உலாவிக்கொண்டிருந்தார் அவர்.

மறுநாள் பொழுதுகூட விடியவில்லை. அதற்குள் எதிர்பார்த்த தகவல் கிடைத்துவிட்டது. 'நேற்றிரவு கணபதி இறந்துவிட்டார்' என்ற செய்திதான் அது. அப்போது சொல்லி முடியாத பீதியொன்று நாகலிங்கத்தின் மனத்தில் குடிகொண்டது. பொழுது விடிவதற்குள் வண்டியைப் பூட்டிக்கொண்டு பக்கத்து ஊரில் முக்கிய அலுவல் இருக்கிறதென்று கிளம்பிவிட்டார். ஊரைத் தாண்டுகிற வரையில் அவருடைய உயிர் ஊசலாடுவது போன்றுதான் இருந்தது. காலை வேளையில் புள்ளினங்கள் எழுப்பும் ஒலி "டேய் கொலைகாரா! டேய் கொலைகாரா!" என்று கூவுவது போல் அவருக்குத் தோன்றியது.

இரண்டு நாட்கள் கழிந்த பிறகுதான் நாகலிங்கம் வீடுவந்து சேர்ந்தார் உள்ளப் புயல் ஒருவாறு அப்போது ஓய்ந்திருந்தது என்றுதான் சொல்லவேண்டும்.

"சமாசாரம் தெரியுமோ? நீங்கள் அன்று அந்தண்டை போனீர்கள்; இங்குக் கணபதிப்பிள்ளை இறந்து

விட்டார் என்ற செய்தி வந்தது மருமகளுக்கு அதிர்ஷ்டம் தான்! கலியாண மாவதற்குள் பெரியவரை உருட்டி விட்டாள்! கலியாணம்கூட நின்று விட்டதாம். உங்களைக் கூட வரச் சொன்னார்கள். பரஞ்சோதியைத் தேற்று வதற்கு" என்றாள் அவர் மனைவி நீட்டி நிறுத்தி. மனம் ஒடிந்திருக்கும் குடும்பத்தாரைப் போய்ப் பார்க்கவிட்டால் நன்றாய் இராதென்று கிளம்பினார் நாகலிங்கம்.

கணபதியின் மனைவி நாகலிங்கத்தைப் பார்த்தவுடன் 'கோ' வென்று கதறிவிட்டாள். "வைத்தியர் ஐயா! எங்களை எல்லாம் ஏச்சுட்டுப் போயிட்டாரே. நிலைமை கவலைக்கிடமா இருக்குன்னு நீங்க ஒரு வார்த்தை கூடச் சொல்லலியே, வைத்தியர் ஐயா' நீங்க எத்தனை தடவை அவர் உசிரைக் காப்பாத்தினீங்க, இந்தத் தடவையும் அதுமாதிரி செஞ்சிருக்கக் கூடாதா? ஆனா பாவி என்னாலே தான் இதெல்லாம் வந்தது. உங்க பொண்ணு கலியாணத்துக்கு நான் சம்மதிச்சிருந்தா நீங்க வந்துண்டு போயிண்டிருப்பீங்களே! இப்போ காரியங்களெல்லாம் கெட்டுப் போச்சே" என்று பிரலாபித்தாள் அவள்.

நாகலிங்கத்திற்குத் துக்கம் பொங்கிற்று. இதயத்தில் இனம் புரியாத ஒரு வேதனை புகுந்து சித்திரவதை செய்வதுபோல் இருந்தது. பகிரங்கமாகத் தான் செய்த வற்றைக் கூறிக் கதறி அழவேண்டும் போல் இருந்தது. அவ்வளவு எளிதான காரியமா அது?

"நடந்தது நடந்துவிட்டது. அதற்காகக் கவலைப் பட்டு இனி முடியுமா? வியாதி சரீரம்; வயது வேறு ஆகி விட்டது. இந்த நிலையில் அவரவர் காலம் முடிந்தவுடன் போகவேண்டியவர்களை நாம் தடுக்க முடியுமா? மேற் கொண்டு நடக்கவேண்டியவைகளைக் கவனியுங்கள் அம்மா" என்று சமாதானம் சொன்னார் நாகலிங்கம்.

"அவரே போய்விட்டார். மேற்கொண்டு என்ன ஐயா இருக்கிறது. அவருடைய கடைசி ஆசையைத்தான் நிறைவேற்ற வேண்டும்."

"என்ன, என்ன கடைசி ஆசையா? அந்த நிலையில் கூடப் பேசினாரா?"

"பேசாமல் என்ன? என்னைக் கூப்பிட்டார், 'கோதை! நம் பரஞ்சோதிக்கு, வைத்தியர் பெண் தனத்தை முடிப்பதில்தான் எனக்கு இஷ்டம், நீ என்னவோ குறுக்கே இருக்கே......' என்று பேசிக்கொண்டே போனார், மாரடைத்துவிட்டது" என்று சொல்லிக் கண்ணீர் விட்டாள் அவள்,

சிறிது நேரம் அமைதி நிலவியது. மீண்டும் அவளே பேச ஆரம்பித்தாள்: 'வைத்தியர் ஐயா, நடந்தது எல்லாம் நடந்துவிட்டது. நீங்க மனசுலே ஒண்ணும் வச்சுக்காமே அவர் கடைசி ஆசையை நிறைவேத்திடணும், அவ்வளவுதான்......" மேலே அவளால் பேச முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது.

நாகலிங்கத்திற்கு மனத்தில் ஆயிரமாயிரம் ஈட்டிகள் பாய்வது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. 'லேகியத்தில் கலந்த ஒரு துளிவிஷம் எவ்வளவு மகத்தான காரியத்தைச் சாதித்துவிட்டது...இருந்தும்......இருந்தும்......நான் ஒரு கொலைகாரன்தானே...அற்ப ஆசைக்காக ஓர் உயிரை...' —உள்ளப் புயலை அடக்க முடியவில்லை அவரால். கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று.

சிந்தனையைக் கலைக்க ஒருவன் வைத்தியர் பேரைச் சொல்லிக்கொண்டு அங்கே வந்தான். வைத்தியரைப் பார்த்துவிட்டு 'ஐயா, மருந்து கொடுக்கறேன்னு சொன்னீங்களே, எசமான் வாங்கிக்கிட்டு வரச்சொன்னாரு" என்றான் வந்தவன் அவசர அவசரமாக.

வைத்தியர், "உன்னைத்தான் எதிர்பார்த்தேன். இங்கேயே வந்துவிட்டாயா? வீட்டிலிருந்தே வாங்கிப் போகக் கூடாது? போ சீக்கிரம்; அலமாரி முதல் தட்டில் பெரிய பட்டை சீசாவில் மருந்து வெச்சிருக்கேன். எடுத்துக் கொண்டு நீ முதலில் போ. நான் பின்னால் வருகிறேன்" என்றார்.

கணபதியின் மனைவி அப்போது குறுக்கிட்டாள். மனத்தில் எழுந்த உணர்ச்சியினால் அப்போது பேசியாக வேண்டும்போல் இருந்தது அவளுக்கு. "வைத்தியர் ஐயா, தயவு செய்து மருந்தை மட்டும் ஆள் மூலமா கொடுத்து அனுப்பாதீங்க. நீங்களே எடுத்துக்கிட்டுப் போங்க. அன்னிக்கு அப்படித்தான், எங்க வேலைக்காரப் பையன்கிட்டே நீங்க லேகியம் கொடுத்து அனுப்பினீங்க. அவன் அதை வாங்கிக்கிட்டு நேரே இங்கே வராமே எங்கெல்லாமோ சுத்திப்பிட்டு வந்தான். அதுக்குள்ளே இவர் உயிர் போயிடுச்சு. அந்த லேகியம் காலத்திலே வந்து அவர் அதைச் சாப்பிட்டிருந்தா ஒரு வேளை பிழைச்சிருப்பாரோ என்னவோ? வைத்தியர் ஐயா எல்லாம் சோதனையாய்ப் போச்சே" என்று சொல்லித் தலையில் கையை வைத்துக்கொண்டு 'கோ' என்று மீண்டும் அவள் அழ ஆரம்பித்துவிட்டாள்.

வைத்தியர் நெஞ்சு துடித்தது. கண்களில் வந்தது ஆனந்த பாஷ்பமா—அழுகையா என்று தெரியவில்லை. "அப்போ...அப்போ நான் அனுப்பிச்ச லேகியத்தை அவர் சாப்பிடலையா?" என்றார் நெஞ்சு படபடக்க.

"இல்லிங்களே! அதைச் சாப்பிட்டிருந்தா இப்படியெல்லாம் நடந்திருக்குமா?"

* * *

நாகலிங்கம் ஆளுடன் வண்டியில் ஏறிக்கொண்டார். 'ஹோ' என்று கொந்தளித்துக் கொண்டிருந்த மனக் கடல் அப்போது அமைதியடைவதைப் போல இருந்தது. அதே சமயத்தில் அவர் உள்ளம், "ஆண்டவனே முருகா! உன் கருணைக்குத்தான் எவ்வளவு மகிமை! மகத்தான பாபத்திலிருந்து என்னை மீட்ட உன் சக்திக்கு என்ன புகழ்பாடுவேன்" என்று நினைத்தது.

# நவீன கொலு

சர்வேஸ்வரனுக்கு 'டிரான்ஸ்பர் ஆர்டர்' வந்த போது ஒரேயடியாக மலைத்துவிட்டார். நவராத்திரி சமயமாகப் பார்த்துத் தன்னை மாற்றமாட்டார்கள் என்றுதான் அவர் நம்பியிருந்தார். அந்த நப்பாசையில் இடி விழுந்துவிட்டதே!

சர்வேஸ்வரனுக்கு மாற்றல் உத்தரவு கிடைத்தவுடன், ஒரு மாத காலம் அதைத் தள்ளிப்போடும்படி மேல் அதிகாரியைக் கேட்கலாம் என்று அவர் நினைத்திருந்தார். பிறகுதான் அது எவ்வளவு முட்டாள்தனம் என்று அவருக்குப் புரிந்தது. திருவனந்தபுரம் வந்த தினம் முதற்கொண்டு இந்த இரண்டு வருஷங்களாகத் தன்னை மறுபடியும் சென்னைக்கே அனுப்பி விடும்படி கேட்டு, அவர் எவ்வளவோ மனுக்கள் அனுப்பிவிட்டார்.

மானேஜ்மெண்டார் என்ற மலை கொஞ்சங்கூட அதற்கெல்லாம் அசைந்துகொடுக்கவில்லை. கடைசியில் அவர் 'டென்ஷிங்' வேண்டுகோள்தான் மானேஜ்மெண்ட் மலையை அடிபணிய வைத்தது. சென்னைக்கு மாற்றப்பட்ட உத்தரவும் கிடைத்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் நவராத்திரிப் பண்டிகை என்று சொன்னால் அவர்கள் ஒத்துக்கொள்வார்களா?

"கோமளி, எனக்கு 'டிரான்ஸ்பர்' கிடைத்துவிட்டது. இன்னும் ஒரு வாரத்தில் சென்னைக்குப் போகவேண்டும்" என்று குதூகலமாகத் தன் மனைவியிடம் செய்தியைச் சொன்னபோது, அவள் ஒரேயடியாக ஆச்சரியக் கடலில் ஆழ்ந்து போனாள்.

"அது சரி; நவராத்திரிக்கு முதல் நாள்தானே நீங்க பட்டணத்து ஆபீஸிலே இருக்கணும். அப்படீன்னு கொலுவை இங்கே வைக்கிறதா, அல்லது அங்கே வைக்கிறதா?" கொஞ்சம் சந்தேகத்துடன் கேட்டாள் கோமளி.

"ஏன்? கொலுவை அங்கேயே வைக்க முடியாதா? இன்னும் ஒரு வாரம் டைம் இருக்கு! அதுக்குள் அங்கேயே போயிடலாம்."

"அதெல்லாம் ரொம்ப சிரமம். அங்குப்போய் வீடு பார்த்து, சாமான் சரிச்சா எல்லாத்தையும் முதல்லே அங்கேகொண்டு சேர்க்கணும் இந்த அமர்க்களத்தில் கொலுவை வேறே வைத்துக்கொண்டால் அவ்வளவுதான். இடுப்பு ஒடிஞ்சு போயிடும்" என்று சொல்லிக்கொண்டே இடுப்பைப் பிடித்துக்கொண்டாள் கோமளி.

"பின்னே கொலுவை எங்கே வைக்கலாம் என்கிறுப்?" அலுப்புடன் கேட்டார் சர்வேஸ்வரன்.

"கொலுவை இங்கேயே வைத்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன்."

"என்ன என்ன? இந்த இடத்திலா! அப்படீன்னு நீ உன் தலையிலேதான் பொம்மையைத் தாங்கிண்டு நிக்க ணும்?"

"எதுக்காம்......?" தோள்பட்டையில் முகவாய்க் கட்டையை இடித்துக் கொண்டாள் கோமதி.

"இந்த வீட்டை காலி பண்ணிவிடுகிறேன் என்று வீட்டுக்காரனிடம் சொல்லிவிட்டேன். அதனால் சாமா னோடு நாம் புறப்படணும்."

"என்னை அவசரக் குடுக்கை, அவசரக் குடுக்கை என்று சொல்வீர்களே. நீங்கள் இப்போது என்னவாம், எதற்காக வீட்டுக்காரனிடம் காலி பண்ணுவதாகச் சொன்னீர்கள்? நவராத்திரியும் பண்டிகையுமா வீட்டை விட்டுக் காலி பண்ணாமல் இருந்தால்தான் என்ன?"

"கோமளி! என்னைவிட உனக்குக் கொலுதான் முக்கியமாய்ப் போச்சு, இல்லையா?"

"நீங்க ஓசத்திதான். ஆனால், கொலுகூடச் சுமங்கலி களுக்கு ஓசத்தி. நம்ப சரோஜாவுக்கு நல்ல இடத்தில் கல்யாணமானது, நம்ம ராஜத்தை நல்லதனமா அவள் அகமுடையான் அழைத்துக்கொண்டது, ராஜூவுக்கு பி. ஏ. பாஸானது, நீங்க ஆஸ்பத்திரியிலிருந்து பிழைச்சு வந்தது, இப்போ டிரான்ஸ்பர் கிடைச்சுது எல்லாம் இந்தக் கொலுவாலேதான். தெரிஞ்சுக்குங்கோ."

"ஆமாம், ஆமாம். இதெல்லாம் நடந்தது நீ கொலு வில் வைத்திருக்கிற நாய், பூனை, சிப்பாய், வண்ணான், வண்ணாத்தி இவளாலேதான் நடந்தது, இல்லையா?"

"ஆமாம் ஆமாம்; மிஞ்சிக்கேட்டா ஏதாவது எடக் காப் பேசுவேள். கொலு இருக்கிற இடத்தில் அம்மன் இருக்காள். அம்மன் இருக்கிற இடத்தில் அஷ்ட ஐஸ்வர் யமும் இருக்கும்......"

"பலே பலே! நல்ல வேதாந்தம் பேசறையே. இந்த வருஷம் நவராத்திரியின்போது 'நவராத்திரி மகாத்மியம்' என்று காலட்சேபம் செய்துவிடு."

"சரி; சரி. அந்தப் பேச்செல்லாம் இப்போ எதற்கு. கொலு வைக்கிறதுக்கு என்ன ஏற்பாடு பண்ணப் போறேள்? அதைச் சொல்லுங்கோ இப்போ," என்ருள் கோமளி.

"ஏற்பாடு என்ன இருக்கு? மாம்பலத்தில் ஒரு பெரிய வீட்டைப் பார்க்க என் நண்பருக்குக் கடிதம் எழுதியிருந்தேன். அவரும் ரங்கநாதன் தெருவில் ஒரு வீட்டை ஏற்பாடு செய்துவிட்டுத் தந்தியடிச்சிருக்கார். நீ நாளைக்கே முக்கியமான சமையல் சாமான்களை எடுத்துக்கொண்டு கிளம்பிவிடு. ஸரோஜாவின் புருஷன் ராஜாமணி ஸ்டேஷனுக்கு வந்து உன்னை அழைத்துக் கொண்டுபோவான். நான் சாமான்களையெல்லாம் கட்டி கூட்ஸில் போட்டுவிட்டு இரண்டு நாள் கழித்து வருகிறேன்."

"அது சரி, நவராத்திரி ஆரம்பிப்பதற்குள் பொம்மைப் பெட்டி வந்து சேர்ந்துவிடுமா?"

"கட்டாயம் வந்துவிடும். நீ கவலையில்லாமல் இரு" என்ருர் சர்வேஸ்வரன்.

சர்வேஸ்வரனும் கோமளியும் மாம்பலம் வந்தவுடன் நவராத்திரிக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் துரிதமாகச் செய்ய ஆரம்பித்தார்கள். வீடும் பெரியதாய் இருந்ததனுல் எல்லாம் சௌகரியமாக இருந்தது. வீட்டின் நடு ஹாலில் கொலு வைக்க வேண்டும் என்று சுவர்களுக்கெல்லாம் வெள்ளையடிக்கப்பட்டு, இரண்டே நாட்களில் ஆர்டர் கொடுத்த படிக்கட்டுகள் தயாராகி, ஹாலில் கட்டப்பட்டுவிட்டன.

சர்வேஸ்வரனுக்கு அந்த வருஷம் ஒரு யோகம். உத்தி யோகத்தில் அப்போதுதான் அவருக்குப் 'பிரமோஷன்' கிடைத்திருந்தது. ஆபீஸில் வேறு மூன்று மாதம் போனஸ் கொடுத்திருந்தார்கள். எனவே, நவராத்திரியை வெகு நன்ருகக் கொண்டாட வேண்டும் என்று, ஒன்பது நாட்களுக்கு தேவி பூஜை செய்ய உள்ளூர் தீக்ஷிதரிடம் ஏற்பாடு செய்திருந்தார். அதை யொட்டி உறவினர் எல்லோருக்கும் அழைப்புக் கடிதம் போயிருந்தது.

மஹாளய அம்மாவாசை நெருங்க நெருங்க உறவு மனிதர்கள் எல்லோரும் வந்து குவிந்துவிட்டனர். அவ ருடைய மூத்த பெண் சரோஜா, அவள் கணவன், அவர் களுடைய ஐந்து குழந்தைகள், இரண்டாவது பெண் ராஜம், அவளுடைய கணவன், தாய்தந்தையர், சர்வேஸ் வரனுடைய சகோதரர்கள், அவர்களுடைய மனைவிமார் கள், கோமளியின் கூடப் பிறந்தவர்கள். ஒன்றுவிட்ட மாமா, ஒன்றுவிட்ட அண்ணு, அவர்களுடைய மனைவிமார் கள், குழந்தைகள், சர்வேஸ்வரனுடைய சொந்த ஊர்க் கணக்குப் பிள்ளை, பட்டாமணியார், அவர்களைச் சேர்ந்த வர்கள் எல்லோருமாக வீட்டில் ஒரே கூட்டம். இதில் கலந்துகொள்ளாதவள் கோமளியின் தங்கைதான். அவள் டில்லியில் இருந்ததால் வரச் சௌகரியப்படவில்லை. கோமளி தந்தி மூலமாக அவளுக்கு அழைப்பு அனுப்பியும் அவளால் வர முடியவில்லை.

சர்வேஸ்வரன் வீடு ஜே ஜே என்று இருந்தது. வேளா வேளைக்கு ஐம்பது அறுபது பேருக்குச் சாப்பாடு! ஒரே குதூகலம். கோலாகலம்! இதற்கிடையில்தான் கஷ்ட மும் பிறந்தது.

திருவனந்தபுரத்திலிருந்து ஒரு வாரத்திற்கு முன்பே 'புக்' பண்ணின சாமான்கள் வரவில்லை. அதில்தான்

இருந்தன பொம்மைகள் நிறைந்த மூன்று ஜாதிக்காய்ப் பெட்டிகள்.

மஹாளய அமாவாசை காலை வெகு கவலையோடு உட்கார்ந்திருந்தார் சர்வேஸ்வரன்.

"அப்பா, பெட்டி இன்னிக்கு வந்துடுமா?" என்று கேட்டாள் அவர் மூத்த பெண் சரோஜா.

"பெட்டி வரலை என்றால் என்ன செய்வது?" என்று சந்தேகத்துடன் கேட்டான் சரோஜாவின் கணவன்.

"ஏன் வராது? நீங்க அஸ்து சொல்லாமல் இருந்தால் எல்லாம் வந்துவிடும்" என்றாள் சரோஜா.

"படிக்கட்டுகள் எல்லாம் ரெடியா யிருக்கு. பொம்மைகள் மத்தியானம் வந்துவிட்டால்கூடப் போதும்; ஒரு மணியில் கொலு வைத்துவிடலாம்" என்றாள் ராஜம்.

"இன்னிக்கு வந்துவிடும் என்றுதான் கூட்ஸ் ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னார். எதற்கும் நான் போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன்" என்று கிளம்பினார் சர்வேஸ்வரன்.

சர்வேஸ்வரன் ஸ்டேஷன் சென்று நீண்ட நேரம் ஆகியும் திரும்பவில்லை. இதற்குள் நேரமாகிவிடவே எல்லோரும் சாப்பிட்டுவிட்டு ஹாலில் கூடிவிட்டார்கள்.

மனிதர்கள் நிறைந்த ஹாலில் ஒருபுறம் காலி கொலுப் படிக்கட்டுகள் காட்சி அளிக்க மறுபுறம் இவர்கள் செய்யும் ஆரவாரம் மனத்தைப் புண்படுத்த, வேதனையே உருக்கொண்டு வீற்றிருந்தாள் கோமளி. 'அம்மன் சோதனை செய்யாமல் இருக்கவேண்டுமே' என்று அவள் உள்ளம் மானஸீகமாக அம்பாளை வேண்டிற்று.

"இந்தக் கொலுவை உத்தேசித்துத்தானே நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்திருக்கோம்" என்றார் கணக்குப் பிள்ளை.

"ஆமாம், ஆமாம். இல்லாவிட்டால் நாம் எல்லோரும் எங்கே ஒன்று சேரப் போகிறோம்" என்றார் கோமளி யின் மாமா.

"நான் தஞ்சாவூரில் இருக்கேன்......"

"நான் திருப்பதியில் இருக்கேன்......"

"எனக்குக் கோயம்புத்தூர்......"

"எனக்கு உள்ளூர்தான், ஆனா டைம் கிடையாது"

"பாருங்கோ, ஊரில் கொள்ளை வேலை சர்வேஸ்வரன் லெட்டரை தட்டக்கூடாது என்று ஓடி வந்தேன்."

"எல்லோரும் அப்படித்தான். ஒரு சம்பவம் என்றால் தான் ஒன்று சேர முடிகிறது. இதை நாம் மறக்கவே முடியாது" என்றார், சர்வேஸ்வரனின் சம்பந்தி. அவர் கொஞ்சம் வேதாந்தி.

"இங்கே நாம் கூடியிருக்கிறதை மறக்காமல் இருப் பதற்காகத்தான் ஒரு ஏற்பாடு பண்ணப் போகிறேன்" என்றான் சர்வேஸ்வரனின் மூத்த பிள்ளை ராஜு.

"என்ன ஏற்பாடாம்?" என்று எல்லோரும் ஏக காலத்தில் கேட்டார்கள்.

"கொலு வைக்க பொம்மை இன்னும் வந்துசேர வில்லை. எப்போ வருமோ தெரியாது. அதுக்குள்ளே நாம் ஒத்தரை ஒத்தர் மறக்காமல் இருக்கிறதுக்கும், நவ ராத்திரியை முன்னிட்டு நாம் ஒன்று சேர்ந்தோம் என்று தெரிவதற்கும் ஒரு முடிவு செய்திருக்கேன். அதை நீங்கள் எல்லோரும் கேட்பீர்களா?"

"நல்ல ஏற்பாட்டிற்கு யாராவது தடை. சொல்வார்களா?"

"அப்படியானால் நான் சொல்றபடி நீங்கள் எல்லோரும் கேட்கணும். பெரியவாள் எல்லோரும், முத்தா மாமா, நம்ப கணக்குப் பிள்ளை, என்னுடைய சின்ன மாமா, பெரிய மாமா எல்லோரும் கொலுப் படிக்கட்டுகளில் மெதுவாக ஏறி முதல்படியில் உட்காரணும். இரண்டாவது படியில் ராஜம், ஸரோஜா, எங்க அத்திம் பேர்கள் உட்காரட்டும். குழந்தைகள் எல்லோரும் மற்றப் படிக்கட்டுகளில் நிரவி உட்கார்ந்தால் போதும்."

"என்னடா கிண்டல் பண்றே" அடிப்பதைப் போல் வந்தான் ராஜாமணி.

"கிண்டல் இல்லேப்பா. பொம்மைகளோ இன்னும் வந்து சேரலே. நாமோ ஒன்று கூடி இருப்பதற்கு அறிகுறியாக ஏதாவது செய்யணும். இப்படி எல்லோரும் நிரவி உட்கார்ந்துகொண்டால், நான் போட்டோ எடுத்துடறேன்" என்றான் ராஜு.

சிறிது நேரம் ஹாலில் மௌனம் நிலவிற்று. பிறகு பெரியவர்கள் எல்லோரும் அணிவகுத்துச் சென்று முதற் படிக்கட்டில் ஏறி அமர்ந்து கொண்டார்கள். பெரியவர்கள் செய்யும்போது சிறிசுகளுக்கென்ன? அவர்களும் அதே போல் சென்று இரண்டாவது படிக்கட்டில் அமர்ந்து கொண்டனர். அதற்குப் பிறகு ஹாலில் ஒருவரையும் காணோம். ராஜு மட்டும்தான் காமிராவுடன் நின்று கொண்டிருந்தான். மற்றவர்கள் யாவரும் (கோமளியைத் தவிர) கொலுப் படிக்கட்டுகளில் நிரவி உட்கார்ந்து கொண்டு விட்டார்கள்.

ராஜு காமிராவைச் சரி செய்துகொண்டான். வெளிச்சம் வேண்டும் என்று ஹாலில் உள்ள லைட்டுகளைத்

தட்டிவிட்டான். போட்டோவுக்குத் தயாராக எல்லோரும் புன்முறுவல் தவழப் படிக்கட்டுகளில் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டார்கள்.

"ரெடி............ஒன்..............டூ"

"கோமளி, பொம்மை பெட்டி வந்துடுத்து!" கத்திக்கொண்டே ஓடிவந்த சர்வேஸ்வரன், ஹாலில் படிக்கட்டுகளையும், அதில் உட்கார்ந்திருந்த மனித பொம்மைகளையும் பார்த்துத் திடுக்கிட்டுப்போனார்.

"அப்பா நல்லடயத்திற்கு வந்தீர்கள். அம்மாவையும் கூப்பிட்டுக் கொண்டுவந்து கடைசி படிக்கட்டில் உட்கார்ந்து கொள்ளுங்கள். எல்லோரையும் சேர்த்து ஒரு கிளிக்......"

"என்னடா இதெல்லாம்.....?" என்றார் சர்வேஸ்வரன் ஆச்சரியத்துடன்.

"எல்லாம் அப்புறம் பேசிக்கலாம். கோமளியைக் கூப்பிடு" என்றார் சர்வேஸ்வரனின் மூத்த சகோதரர்.

கோமளி வெட்கத்துடனே வந்து சர்வேஸ்வரன் பக்கத்தில் கடைசிப் படிக்கட்டில் அமர்ந்து கொண்டாள்.

"ஸ்டெடி ஒன்......டூ......மூன்றும் படிக்கட்டு விச்சு, தலைமயிரைக் கோதிவிட்டுக்கோ, ராஜம் கொஞ்சம் சிரி... ஸ்டெடி...ஒன்...டூ...திரீ"

"தேங்க்யூ!"

போட்டோ எடுத்தபின் மனிதப் பொம்மைகள் மெதுவாகக் கீழே இறங்கின.

மண் பொம்மைகள் ஏற்றப்பட்டன.

# அபசாரம்

---

சங்கரதாஸ் பக்தி சிரத்தையுடன் பூஜை யறையில் வைத்திருந்த வீணையை வணங்கினர். அப்பொழுது கண்ணீர் மளமளவென்று வந்துவிட்டது. துயரத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டார். ஆனல், இந்த மாளாத துயரத்தை எவ்வளவு காலம் அடக்கி வைத்துக்கொள்ள முடியும்?

சங்கரதாஸ் நல்ல சங்கீத வித்துவான். அதோடுகூட வீணை வாசிப்பதில் மகா சமர்த்தர். அவர் வீணையை எடுத்து மீட்டினல், கலைமகளே வீணை வாசிப்பதுபோல் இருக்கும். வீணையின் ஒலியில் குழைந்து நாத வெள்ளமாக அவருடைய பாடல்கள் வெளிவரும்போது கேட்பவர்களின் மெய் சிலிர்க்கும். அதெல்லாம் இப்போது பழங் கதையாகிவிட்டது. அவர் உற்சாகத்தோடு பாடிய காலமெல்லாம் கனவாகிவிட்டது.

அன்றொரு நாள் அவருடைய சீடர்களில் ஒருவரான முருகதாஸ், குருவை என்ன கேள்வி கேட்கிறோம் என்று தெரிந்துகொள்ளாமல், "சுவாமி, இப்போதெல்லாம் நீங்கள் முன்புபோல் இல்லாமல், ஏன் ஒருமாதிரியாக இருக்கிறீர்கள்? சதா சுவாமி படத்திற்கு முன் இருக்கும் வீணையைப் பார்த்துக் கண்ணீர் விடுகிறீர்களே; அடியேன் அறிய ஆவலாய் இருக்கிறேன். என்னால் உங்கள் துயரத்தைத் தீர்த்துவைக்க முடியுமானால் ....." என்றான். பேச வந்ததை அவன் முடிக்கவில்லை. அவன் நாத் தழுதழுத்தது.

சங்கரதாஸ் சீடனை உற்று நோக்கினார். தம்முடைய தீராத் துயரத்தை மனம்விட்டுக் கூறி ஆறுதல் பெற வேண்டும்போல் இருந்தது அவருக்கு. ஆனால், 'இவனிடம் சொல்லி என்ன பயன்? என்னுடைய உள்ளக் குமுறலை இவனா தீர்த்து வைக்கப்போகிறான்?' என்று சும்மா இருந்து விட்டார்.

கடல் அலைகளுக்கு ஓய்ச்சல் இல்லை. தன் உள்ள அலைகள்கூடக் கடல் அலைகளாக மாறிவிட்டன என்கிற நினைவு அவருக்கு.

குரு பேசாமல் இருந்ததற்காக முருகதாஸும் 'கம்' என்று இருந்துவிடவில்லை. அவர் உள்ளத்தில் ஊறி இருந்த துயரத்தை நீக்கிவிடவேண்டும் என்று சமயம் நேர்ந்தபோதெல்லாம் பணிவாகவும் பக்தியுடனும் காரணங்களைக் கேட்கத் தொடங்கினான்.

ஒருநாள் குருவின் கல்மனம் கரைந்தது. "முருகதாஸ், என் வாழ்க்கையில் நேர்ந்த இந்த விஷயத்தை நான் யாரிடமும் இதுவரையில் சொன்னதில்லை. உன்னிடம் சொல்கிறேன். நான் செய்தது ஒரு பெரிய அபசாரம்;

கேட்பதுகூடப் பாவம்; ஆனாலும், உன்னிடம் கூறு கிறேன், கேட்டவுடன் மறந்துவிடு" என்றார்.

## 2

இருபது ஆண்டுகளுக்கு முன், சங்கரதாஸ் வீணை யில் பயிற்சி பெறவேண்டும் என்று தஞ்சாவூருக்கு வந்தார். அந்தக் காலத்தில் வீணையில் மகா வித்துவான் என்று பெயர் எடுத்தவர் கிருஷ்ணதாஸ். கிருஷ்ணதாஸ் என்றால் வீணை, வீணை என்றால் கிருஷ்ணதாஸ் என்று தான் ஜனங்கள் சொல்லுவார்கள். தெய்வ பக்தி மிகுந்த வர். அற்ப ஆசைக்காகக் கலையை விற்கத் துணியாதவர். ஆண்டவன் நாமாவளிகளைப் பாட வாயும், அதற்குரிய கருவியாக வீணையும் இருக்கின்றன என்ற எண்ணமுடை யவர். அவரிடம் வந்து சேர்ந்தார் சங்கரதாஸ்.

சங்கரதாஸ் வந்த சமயம், கிருஷ்ணதாஸ் உள்ளே பூஜை அறையில் வீணையை மீட்டிப் பாடிக்கொண்டிருந் தார். பக்திப் பிரவாகத்தில் அவர் கண்கள் மூடியிருந்தன. வாய் கீதத்தைப் பாடிக்கொண்டிருந்தது. விரல்கள் வீணைத் தந்திகளை மீட்டிக்கொண்டிருந்தன. நைந்து நெக் குருகிக் கிருஷ்ணதாஸ் வீணையின் ஒலிக்கு ஏற்பப் பாடும் போது சுற்றி நின்ற பொருள்கள் எல்லாம் உருகின.

பூஜையை முடித்துக்கொண்டு கிருஷ்ணதாஸ் வெளியே வந்தபோது, வாசல் திண்ணையில் கற்சிலைபோல் சங்கரதாஸ் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். மேலே கை வைத்து எழுப்பிய பிறகுதான் சங்கரதாஸுக்கு உணர்வு வந்தது. "சுவாமி, தாங்களா இவ்வளவு நேரம் வீணையில் பாடினீர்கள்? என் வாழ்க்கையில் ஏற்பட்ட இந்த மகத் தான பொழுதைச் சொர்க்கத்திலும் காணமுடியாது சுவாமி. கிருஷ்ணதாஸ் தாங்கள்தானா? நீங்கள் கிருஷ்ண

தாஸ் அல்ல சுவாமி, கிருஷ்ணதாஸ் அல்ல சாட்சாத் சரஸ்வதிதேவியே ஆண் ரூபத்தில் வந்திருக்கிறீர்கள்'' என்று என்ன என்னவோ பிதற்றிக்கொண்டு சங்கரதாஸ், கிருஷ்ணதாஸின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டுவிட்டார்.

கிருஷ்ணதாஸுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. "யாரப்பா நீ? எங்கே வந்தாய்?'' என்று கேட்டார்.

"நான் அயலூர் சுவாமி. என் பெயர் சங்கரதாஸ். தங்களிடம் சிஷ்யனுக இருந்து வீணை கற்றுக்கொள்ள வந்தேன். தங்கள் வீணுகானத்தில் லயித்து, வந்த காரியத்தையும் மறந்து இப்படி உட்கார்ந்துவிட்டேன். க்ஷமிக்க வேண்டும்.''

"சரி அப்பா, உள்ளே வா'' என்று சொல்லிச் சங்கரதாஸை அழைத்துக்கொண்டு போனுர் கிருஷ்ணதாஸ். பார்த்த மாத்திரத்தில் சங்கரதாஸைப் பிடித்துவிட்டது அவருக்கு. தம்முடைய எண்ணங்களை நிறைவேற்றி வைக்கப்போகிறவன் சங்கரதாஸ் என்று அவருடைய அந்தராத்மா சொல்லிற்று.

## 3

சங்கரதாஸ் கிருஷ்ணதாஸின் சீடராகிவிட்டார். குருபக்தி விசேஷத்திஞலேயே கலை அவரிடம் வளர்ந்தது. வீணை வாத்தியத்தில் உள்ள நெளிவு சுளிவுகளையெல்லாம் சொல்லிக்கொடுத்தார் கிருஷ்ணதாஸ். உற்சாகத்தோடு எல்லாவற்றையும் கற்றுக்கொண்டார் சங்கரதாஸ்.

ஆனுல் ஒரு குறை. கிருஷ்ணதாஸிடம் ஒரு பழைய வீணை இருந்தது. அந்த வீணை கிருஷ்ணதாஸின் மூதாதையர்களுடையது. பரம்பரைச் சொத்தான அந்த வீணையைக் கிருஷ்ணதாஸ் கண்களை இமை காப்பது போல்

காத்துவந்தார். எங்கே சென்றாலும், அதைத் தாமே எடுத்துச்செல்வார். பிறர் அதைத் தீண்டக்கூடச் சம்மதிக்கமாட்டார்.

அந்த வீணையின் நாதமே அலாதி. எந்தக் காலத்தில் எப்படிச் சிரமப்பட்டு எவ்வளவு காலத் தவணை எடுத்துக் கொண்டு அதை மேளம் கட்டிச் செய்து முடித்தார்களோ, அதற்கு ஈடு சொல்ல முடியாமல் இருந்தது.

கிருஷ்ணதாஸ் தினமும் அந்த வீணையில்தான் சாதகம் செய்வார். சிஷ்யர்கள் எல்லோரும் மற்ற வீணைகளில் பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். எவருமே அந்த வீணையைத் தொடக்கூடாது என்று கடுமையான உத்தரவு இருந்தது.

சங்கரதாஸ், கிருஷ்ணதாஸின் அன்பிற்குப் பாத்திரமானவர்; அவருடைய விருப்பு வெறுப்புத் தெரிந்து நடப்பவர். கிருஷ்ணதாஸ் சிற்சில சமயங்களில் தம்முடைய அந்தரங்க விஷயங்களைக்கூட அவரிடம் சொல்லுவது வழக்கம். அப்படி இருந்தும் சங்கரதாஸ் அந்த வீணையைத் தொடுவதில்லை. சலுகைக்குக் காரணமாகத் தாம் மட்டும் அதை உபயோகிக்கலாம் என்ற எண்ணம் இருந்தது சங்கரதாஸுக்கு. ஆனால், அந்த எண்ணம் நிறைவேறவில்லை கிருஷ்ணதாஸ் வீணை விஷயத்தில் கடுமையாக இருந்தார். சங்கரதாஸ் இரண்டொரு சமயம் அனுமதி கேட்டபோது மறுத்துவிட்டார்.

மனத்தில் ஆசை வேரூன்றிவிட்டால், அது நிறைவேறுமற்போனால் உள்ளம் எவ்வளவு கஷ்டம் அனுபவிக்கிறது! சங்கரதாஸ் மட்டும் அதற்கு விலக்கா? அந்த வீணையல்லாது மற்றொரு வீணையில் சாதகம் செய்யும்போது அவரால் நிறைவு காண முடியவில்லை எதோ குறை இருப்பதுபோலவே தோன்றிற்று. ஒருதடவை ஒரு

கிருதி மட்டும் ஆத்மத் திருப்திக்காக அந்த வீணையில் பாட வேண்டும்போல் இருந்தது அவருக்கு.

ஒருநாள் காலை, கிருஷ்ணதாஸும் மற்றச் சிஷ்யர்களும் காவிரிக் கரைக்குச் சென்றிருந்தார்கள். சங்கரதாஸ் மட்டும் வீட்டில் இருந்தார். கிருஷ்ணதாஸின் மனைவி ஏதோ காரியமாகப் பக்கத்து வீட்டுக்குச் சென்றிருந்தார். தனிமையில் விடப்பட்ட சங்கரதாஸ் பிடிபடாத நிலையில் இருந்தார். அவர் உள்ளம் அலை பாய்ந்தது. தனிமையை நழுவவிட அவருக்கு விருப்பம் இல்லை. ஆசை கொந்தளித்தது. மெதுவாகப் பூஜை அறைக்குள் சென்றார். படத்திற்கு முன் வீணை நித்திரையில் இருந்தது. சங்கரதாஸ் அதன் உறையைக் கழற்றினர்.

காலையில் இனிமையாகப் பூங்காற்று வீசியபோதிலும் அவர் தேகம் வேர்த்தது. உடல் பதறிற்று. விரல்கள் நடுங்கின. ஆனல், அவை யாவும் சிறிது நேரந்தான். வீணையை எடுத்து மடியில் சாய்த்துத் தந்தியை மீட்டியவுடன் சங்கரதாஸ் மெய்ம்மறந்தார். வீணுகானத்தில் ஒன்றிக் கலந்துவிட்டன அவர் உயிரும் உள்ளமும்.

கிருஷ்ணதாஸின் பிலஹரி ராகக் கீர்த்தனையை அந்த வீணையில் இசைத்தார். சங்கரதாஸ் அப்போது அவர் கண்களில் கண்ணீர் பெருகிற்று. தலை முன்னும் பின்னும் அசைந்தது. சாட்சாத் பகவான் திருநடனம் புரிவதற்கு ஏற்ப வீணை வாசிப்பது போல் இருந்தது அந்தக் காட்சி.

இடையில் வந்த கிருஷ்ணதாஸின் மனைவி கானத்தில் மெய்ம்மறந்து சங்கரதாஸின் அருகில் அமர்ந்துவிட்டார். சிஷ்யர்கள் ஒவ்வொருவராக வந்து சங்கரதாஸின் செய்கையில் பயமும் வியப்பும் அடைந்து ஒன்றும் செய்யத்

தோன்றுமல் மூலைக்கு ஒருவராக அமர்ந்து கானத்தில் லயித்துவிட்டார்கள்.

கடைசியில் கிருஷ்ணதாஸ் வந்தார். ஈரவேஷ்டியை இடுப்பில் கட்டியபடி, கிண்டியில் தீர்த்தத்துடன் தெருவில் நடந்து வரும்போதே வீணைகானம் அவரைக் கவர்ந்தது. காந்தம் இரும்பை இழுப்பதுபோல் வீணையின் நாதம் அவரை இழுத்தது. சுற்றி நின்ற அத்தனை பொருள்களையும் மறந்து ஓட்டமும் நடையுமாக வீட்டை அடைந்தார் அவர்.

பூஜை அறையில் அவர் கண்ட காட்சி! சங்கரதாஸ் வீணைகானம் செய்துகொண்டிருந்தார். அவரைச் சுற்றிச் சீடர்கள் உலகத்தை மறந்து கண்களை மூடியபடியே நாத வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருந்தார்கள். கிருஷ்ண தாஸுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர் செவிகளுக்கு வீணையின் ஒலியும், சங்கரதாஸின் கானமுமே விழுந்தன. அப்படியே வாசற்படியில் சாய்ந்துவிட்டார்.

சங்கரதாஸ் கீதத்தை முடித்துவிட்டு மெள்ளக் கண்களைத் திறந்தபோது அவர் திருஷ்டியில் முதன்முதலில் விழுந்தவர் வாசற்படியின் அருகே இருந்த கிருஷ்ணதாஸ் தான். குருவைக் கண்டமாத்திரத்தில் அவர் உடல் பயத்தால் நடுங்கிற்று. முகத்தில் பீதி சூழ்ந்துகொண்டது. செய்யத்தகாத காரியத்தைச் செய்துவிட்டதனால் அவர் மனச்சாட்சியே அவரைச் சித்திரவதை செய்தது.

கிருஷ்ணதாஸ் மெதுவாகக் கண்களைத் திறந்து, "சங்கரதாஸ்!" என்று அழைத்தார்.

சங்கரதாஸின் தேகம் நிலைகொள்ளாமல் தவித்தது. குருவுக்குச் செய்த அபசாரம் எவ்விதமாக முடியுமோ என்று எண்ணிக்கொண்டு மெதுவாக எழுந்தார். அதற்குள் கிருஷ்ணதாஸ், சங்கரதாஸை நெருங்கிவிட்டார்.

சங்கரதாஸுக்குத் தம் குருவைப் பார்ப்பதற்கே பயமாய் இருந்தது. ஒன்றுமே புரியாத நிலையில் அவர் தம்மையும் தம்மைச் சூழ நின்றவர்களையும் மறந்தார்.

அடுத்த கணம் அவர் கைகள் இரண்டும் வீணையைத் தூக்கின. கால்கள் அவரைச் சுமந்துகொண்டு ஓட்ட மெடுத்தன. ஆம்! சங்கரதாஸ், கிருஷ்ணதாஸ் வீட்டுப் புழைக்கடைப் பக்கமாக வீணையுடன் ஓட்டமெடுத்தார்.

கிருஷ்ணதாஸ், "சங்கரதாஸ்! சங்கரதாஸ்!" என்று கூவிக்கொண்டே அவரைப் பின் தொடர்ந்தார். ஆனால், அவரைப் பிடிக்க முடியவில்லை. இளமைப் பருவம் நிறைந்த சங்கரதாஸின் உரம்பெற்ற கால்கள வாயு வேக மாக அவரை வெகுதூரம் எடுத்துச் சென்றுவிட்டன.

## 4

"முருகதாஸ், இதுதான் என் சோகக் கதை; அதோ இருக்கிற அந்த வீணையின் வரலாறு. குருவுக்குப் பெரிய அபசாரம் செய்துவிட்டு இந்தப் பாவி இன்னும் உயிருடன் இருக்கிறேன். அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளாமல் ஆவேச உணர்ச்சியில் ஓடி வந்துவிட்டேன். அன்று முதல் அந்த வீணையைத் தொடுவதில்லை. மகான் கிருஷ்ணதாஸர் என்னைப்பற்றி என்னவெல்லாமோ கனவு கண்டார். அவருக்கு அபசாரம் செய்ததோடு அல்லாமல் குருத்துரோகமும் செய்துவிட்டேன்" என்று சொல்லி நிறுத்தினார் சங்கரதாஸ். அவர் முகம் வீங்கி வெளுத்துப் போயிற்று. பெருமூச்சு விடும்போது மார்பகம் முன்னும் பின்னும் வீங்கி இளைத்தது.

மயிர்க்கூச்செறியும் இந்தச் சம்பவத்தை மெய் சிலிர்க்கக் கேட்டுக்கொண்டிருந்தான் முருகதாஸ். சங்கரதாஸ் சொல்லி முடித்ததும் அவன் கண்கள் பிரகாசம் அடைந்தன.

"சுவாமி! உங்களுக்கு விடுதலை கிடைத்துவிட்டது. இத்தனை காலம் உங்கள் உள்ளத்தை வாட்டி வதைத்த இந்தக் குரு அபசாரம் இன்று முதல் மறையப்போகிறது" என்றான் உணர்ச்சியுடன்.

"என்ன முருகதாஸ்? என்ன சொல்கிறாய்? குருத் துரோகம் மிகப் பொல்லாததல்லவா?" என்றார் சங்கர தாஸ் பரபரப்புடன்.

"இல்லை சுவாமி; நீங்கள் செய்தது குருத்துரோகம் அல்ல; குருத்தியாகம்" என்றான் முருகதாஸ் நிதானமாக.

"என்ன!"

முருகதாஸ் தீர்க்கமான குரலில் தெளிவாகப் பேச ஆரம்பித்தான்: "சுவாமி, அன்று நீங்கள் உங்கள் குரு கிருஷ்ணதாஸரைக் கண்டவுடன் பயந்துபோய்ப் பீதியில் இன்னது செய்கிறோம் என்று அறியாமல் வீணையுடன் ஓடி வந்துவிட்டீர்கள். உங்களுக்குத் தெரியுமா, கிருஷ்ண தாஸரின் உள்ளம் அப்போது எப்படி இருந்தது என்று? உங்கள் கானத்திலே அவர் மெய்ம்மறந்துவிட்டார். உண்மையில் அவருக்குத் தாங்கள் இவ்வளவு அருமையாக வீணை வாசிப்பீர்கள் என்று தெரியாது. தாங்கள் வீணையுடன் பாடியபோது, அவருடைய மூதாதையர்களின் ஞாபகம் எல்லாம் வந்ததாம். இவ்வளவு காலம் இந்த வீணையை உங்களிடம் வாசிக்கக் கொடுக்காமல் இருந்தோமே என்று துக்கித்தாராம். உங்களை அப்படியே ஆலிங்கனம் செய்துகொண்டு ஆசீர்வாதம் செய்ய உங்கள் பெயர் சொல்லி நெருங்கியபோது நீங்கள் இம்மாதிரிச் செய்துவிட்டீர்கள். அன்றுமுதல் அவர் உங்கள் நினைவாகவே இருந்தார். வீணை போனதில்கூட அவருக்கு வருத்தம் இல்லை. இப்படிப்பட்ட அருமையான சீடனை இழந்துவிட்டோமே என்ற துக்கந்தான் அவருக்கு."

"முருகதாஸ், எல்லாம் விசித்திரமாக இருக்கிறதே! என்மேல் அவர் கோபப்படவில்லையா? என் வீணு கானத்தை அவர் புகழ்ந்து ஆசீர்வாதமா செய்தார்?" என்ருர் சங்கரதாஸ் மகிழ்ச்சி பொங்க.

"ஆம் சுவாமி, நான் சொன்னது அவ்வளவும் சத்தியம்" என்ருன் முருகதாஸ்.

"முருகதாஸ், பதினைந்து வருஷத்திய மனப்புண் இன்றுதான் எனக்கு ஆறியது. உனக்கு இந்தச் செய்திகள் எல்லாம் எப்படித் தெரியும்? ஏன் என்னிடம் இவ்வளவு காலம் சொல்லவில்லை?"

"சுவாமி, க்ஷமிக்க வேண்டும். கிருஷ்ணதாஸர் இறப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்புதான் அவரிடம் நான் சீடனுக அமர்ந்தேன். அவருடைய தெய்வீக வீணை போன பிறகு சங்கீதத்தில் அவர் கவனமே செலுத்தவில்லை. சீடர்கள் எல்லோரும் போய்விட்டார்கள். நான் மட்டும் அவருக்குப் பணிவிடைகள் செய்துகொண்டு வந்தேன்.

"ஒரு நாள் என்னை அவர் கூப்பிட்டு இந்த வீணையைப்பற்றியும் உங்களைப்பற்றியும் சொன்னுர். 'வீணை வாத்தியம் எங்கள் பரம்பரைச் சொத்து. அந்தக் கலையை விருத்திசெய்ய என் சீடன் இருக்கிருன் என்ற தைரியத்தில் இருந்தேன். அந்த ஆசையும் போய்விட்டது. முருகதாஸ், என் வீணையைக் கண்டுபிடிக்கும் புனித வேலையை உன்னிடம் ஒப்படைக்கிறேன். என் சீடனையும் கண்டுபிடித்து அவன் குருவுக்கு அபசாரம் செய்யவில்லை என்று சொல்லிவிட்டால் என் ஆத்மா சாந்தி அடைந்துவிடும்' என்ருர். 'சரி' என்று அவரிடம் ஒப்புக்கொண்டேன். இன்று என் குருவுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றிவிட்டேன். இவ்வளவு காலம் தாங்கள் இந்த வீணையைப் பற்றி ஒன்றும் கூருததால்தான் நான் மௌனமாக இருந்

தேன்" என்று சொல்லி நிறுத்தினான் முருகதாஸ். உள்ளத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சியை அவன் முகம் பூர்ணமாக எடுத்துக் காட்டியது.

சங்கரதாஸ் மெய்ம்மறந்தார். 'குருவுக்கு அபசாரம் செய்யவில்லை' என்ற எண்ணம் உதயமானவுடன் சிறைக் கூடத்திலிருந்து விடுதலை கிடைத்தது போன்றிருந்தது அவருக்கு. "முருகதாஸ், என் உள்ளத்தை வாட்டி வதைத்த பழி நீங்கிவிட்டது. வா, நம் குருநாதரின் வாக்கை நிறைவேற்றலாம்" என்றார்.

அடுத்தகணம், இவ்வளவு காலம் உபயோகத்தில் இல்லாமல் இருந்த அந்த வீணை சங்கரதாஸரின் மடியில் தாவிற்று. வீணையை மீட்டியபடி மெய்ம்மறந்தார் சங்கரதாஸ்.

முருகதாஸ் கானத்தைப் பொழிந்து கொண்டிருந்தான்.

# மகுடிக்காரன் சிலை

சமீபத்தில் நான் மலையாள நாட்டிற்குச் சென்ற போது அம்மாதிரியான ஓர் அரிய சந்தர்ப்பம் கிடைக்குமென்று நினைக்கவே இல்லை. சென்னையை விட்டுக் கிளம்பும்போதே 'ஐயோ அங்குப் போகவேண்டுமே' என்று சலித்துக்கொண்டவன், பிறகு அங்கே ஏற்பட்ட ஓர் அனுபவம் காரணமாக மலையாள நாட்டைப்பற்றிக் கொண்டிருந்த அபிப்பிராயங்களையெல்லாம் மாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று.

எர்ணுகுளத்திலிருந்து ஒரு மைல் இருக்கும் என்று நினைக்கிறேன். பச்சாளம் நல்ல அழகிய கிராமம். பெரும்பாலும் மாலை வேளைகளை அங்குத்தான் நான் கழிப்பது வழக்கம். மாலை சூரியன் மங்கித் தன்னுடைய செங்கதிர்களால் காவிக் குழம்பாகச் செய்துவிடுவான் பச்சா

ளத்தை. காலையிலும் மாலை நேரத்திலும் சூரியனின் கதிர்கள் பட்டுக் கிராமம் பொன் வண்ணத்தால் திகழும் போது எல்லோர் உள்ளத்திலும் கதிரவனின் வித்தை ஞாபகத்திற்கு வராதிராது.

இப்படித்தான் ஒரு நாள் பச்சாளத்தில் கொச்சி பாகவதருடன் பேசிக்கொண்டிருந்தேன். அவர் சம்பாஷணையில் வல்லவராதலால் சுவையான விஷயங்கள் பல பேசி என்னைக் கவர்ந்துவிட்டார். கொச்சி பாகவதரிடத்தில் நான் கண்டவரையில் என்ன விசேஷ குணமென்றால் தன்னைப்பற்றி அவர் பேசிக்கொள்ளவே மாட்டார்; பொதுவாகத்தான் பேசுவார். ரசானுபவமாக இருக்கும். அன்றையதினம் சங்கீதம் சிற்பம், ஓவியம் ஆகியவற்றைப்பற்றிப் பேச்சு வளர்ந்தது. எனக்குச் சங்கீதம் என்றால் உயிர். நல்ல சங்கீதத்தைக் கேட்டுக்கொண்டு பசிதாகம் இல்லாமல் எவ்வளவு காலம் வேண்டுமானாலும் இருக்கலாம் என்பது என்னுடைய கொள்கை. அதைத்தான் பாகவதரிடம் சொன்னேன். கொச்சி பாகவதர் என் சித்தாந்தத்தை ஒத்துக்கொண்டாரே யொழிய முழு ஆதரவு தரவில்லை. அவர் வெகுவாகச் சிற்பக் கலையைப் பற்றித்தான் பேசினார். நானும் அதில் கலந்துகொண்டு என் அனுபவங்களைச் சொன்னேன். அஜந்தா, எல்லோரா, சித்தன்ன வாசல் ஆகிய குகை ஓவியங்களைப்பற்றி வானளாவப் புகழ்ந்தேன். மாமல்லபுரச் சிற்ப அதிசயங்களைப் பற்றிக் கூறினேன்.

கொச்சி பாகவதர் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, "ஸார் நீங்கள் நாகநேரியில் மகுடிக்காரன் சிலையைப் பார்த்தீர்களா?" என்று கேட்டார்.

"ஏன் பார்த்திருக்கிறேன். ஒரு கிழவன் மகுடி ஊதுகிறான். அவன் கையில் படமெடுத்த பாம்பொன்று சுற்றக்

கொண்டிருக்கிறது. சிலையில் பாம்பு சீறும் பாவமும், பாம்பாட்டி மகுடி ஊதும் பாவமும் வெகு அற்புதமாக இருக்கின்றன. சமீபகாலத்தில் செய்யப்பட்ட சிற்பமாக இருக்கவேண்டும்'' என்றேன்.

''என்ன அற்புதமாகச் சிலை அமைந்துவிட்டது தெரியுமா?'' என்றார் பாகவதர்.

நான் சிரித்துக்கொண்டே பதில் சொன்னேன்: ''அது சிற்பியின் சாமர்த்தியம்.''

''அதுதான் இல்லை. மகத்தான தியாகத்தின் மூலம் எழுந்தது அந்தச் சிற்பம். அதனால்தான் அது அப்படி ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறது. ஒன்று மட்டும் வைத்துக் கொள்ளுங்கள்: தியாகத்தின் மூலம் எழுந்த எதுவும் நன்றாகவே இருக்கும்.''

நான் ரொம்பவும் வற்புறுத்தியதன்பேரில் பாகவதர் மகுடிக்காரன் சிலையைப்பற்றிய ரசமான சம்பவத்தைச் சொன்னார். அப்பப்பா! அதைக் கேட்கும்போதுதான் எவ்வளவு மயிர்க்கூச்சம் ஏற்பட்டது.

ஐம்பது வருடங்களுக்கு முன்பு நாககேரியை ஒரு கிராமம் என்று யாருமே அழைக்கமாட்டார்கள். கொச்சி சமஸ்தானத்தைச் சேர்ந்த அது ஒரு வனாந்திரப் பிரதேசமாக இருந்தது. துஷ்ட ஜந்துக்கள் வசித்துவந்த அந்தக் காட்டில் சமஸ்தான அரசர்கள் வேட்டையாட வருவார்கள். திவான்கள் 'கேம்பு' வந்து இறங்கி உல்லாசமாகக் காலம் கழிப்பார்கள். இப்படிப் பொழுது போக்குவதற்கும் வேட்டையாடுவதற்கும் இலக்காக இருந்த நாககேரிக்குத் திடீரென்று ஒரு யோகம் பிறந்தது. அதுவும் ஒரு வெள்ளையனால் ஏற்பட்டது. ஸ்காட் என்று அந்தத் துரைக்குப் பெயர். சமஸ்தானத்தில் ரெஸிடெண்டாய்

இருந்தான். ஒருதடவை உல்லாசமாக நாகநேரிக்கு வந்தவன் அதன் இயற்கை அழகில் ஊறித் திளைத்துவிட்டான். கண்ணுக்கு எட்டியவரையில் மரங்களும், கொடிகளும், செடிகளும் புதர்போல் மண்டிக்கிடந்த அந்தப் பிரதேசத்தைச் சமஸ்தானத்தின் காட்டு இலாகாப் பகுதியுடன் இணைக்க ஏற்பாடு செய்துவிட்டுச் சீமைக்குக் கிளம்பி விட்டான்.

நாகநேரி காட்டு இலாகாவோடு சேர்ந்தவுடன்தான் அதற்கு யோகம் பிறந்தது என்று சொல்லவேண்டும். ஏனெனில், அதற்குப் பிறகுதான் அந்தப் பிரதேசத்தில் ஒரு சிறு பங்களா கட்டப்பட்டு அதில் லெப்டினண்ட் கர்னல் சர்வோத்தமன் பாரஸ்ட் ஆபீஸராய் வந்து குடியேறினர்.

மனைவியை இழந்திருந்த சர்வோத்தமனுக்கு மரங்களும் செடிகளும்தாம் உற்றார் உறவினர். தன் சிறு பரிவாரங்களுடன் அங்கு அவர் ஆபீஸ் நடத்திக் கொண்டிருந்தார். விருட்ச ஜாதிகளைக் கண்ணெனப் பாதுகாத்தார். மனித சமுதாயத்திற்குக் காடுகள் அவசியமென நாகநேரியைப் பன்மடங்கு வளமுள்ள வனந்தரமாகச் செய்தார் இப்போது கொண்டாடுகிற வன மகோத்சவத்தைப் போல் அவரும் அந்தக் காலத்தில் வன மகோத்சவம் கொண்டாடினர். பருவகால மாற்றங்கள் முறைப்படி நடந்துவந்த காரணத்தினால் அவர் நட்ட மரங்கள் பட்டுப்போகாமல் செழித்து வளர்ந்து நாகநேரியை அழியாத ஒரு செல்வமாகச் செய்துவிட்டது.

சர்வோத்தமன் வனமகோத்சவம் கொண்டாடும் போதுதான் ஒரு தவறு செய்துவிட்டார். ஆனல், அதையா தவறு என்று சொல்லுவது?

ஒருசமயம் சொந்த ஊர் சென்று திரும்பிவந்த சர்வோத்தமன் தன் வேலையாட்களை அவசரமாக அழைத்தார். டேவிட்டும், ரத்தினசாமியும் ஓடோடிவந்து ஆபீஸரின் உத்தரவுக்காகக் காத்திருந்தார்கள். "டேவிட் என் கையில் என்ன இருக்கிறது பார்த்தாயா? இதற்குப் பெயர்தான் தாழை இதை நமது வாய்க்கால் கரை ஓரமாக நடவேண்டும் தெரிந்ததா?" என்ருர் கையில் வைத்திருந்த தாழையை ஆட்டிக்கொண்டே.

டேவிட்டிற்கும் ரத்தினசாமிக்கும் ஒன்றும் புரியவில்லை. சர்வோத்தமனையும் அவர் கையிலிருந்த தாழையையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"என்ன டேவிட்! அப்படி முழித்துப் பார்க்கிருய். வெறும் தாவர வஸ்துதான். புலியன்று, சிங்கமன்று, பாம்பன்று. தெரிந்ததா?" என்ருர் சர்வோத்தமன் உற்சாகமாக.

டேவிட்டும் ரத்தினசாமியும் தாழையை நட்டார்கள். சர்வோத்தமன் சொன்னபடியெல்லாம் அதைக் கட்டிப் பாதுகாத்தார்கள். தாழை புதர்போல் மண்டி வளர ஆரம்பித்துவிட்டது.

அந்த வருஷம் சர்வோத்தமனின் ஒரே மகள் தரங்கிணி நாககேரிக்கு வந்திருந்தாள். சென்னையில் காலேஜில் படித்துக்கொண்டிருந்த அவள் கோடை லீவைக் கழிக்க அங்கு வர நேர்ந்தது. தரங்கிணி வந்துவிட்டால் போதுமா? துணைக்கு யாராவது வேண்டுமே! அதற்காகத்தான் தூர பந்துவான அத்தைக் கிழவி ஒருத்தியைத் தஞ்சையிலிருந்து வரவழைத்திருந்தார் சர்வோத்தமன்.

தரங்கிணிக்கு நாககேரியை ரொம்பப் பிடித்திருந்தது. தந்தை வெளியே சுற்றிவரக் கிளம்பினுல் அவளும் கூடக்

கிளம்பிவிடுவாள். இது என்ன மரம், அது என்ன செடி என்று ஆயிரம் கேள்விகள் கேட்டுச் சர்வோத்தமன் உயிரை வாங்கிவிடுவாள். காட்டில் இயற்கையோடு ஒட்டி வளர்ந்திருக்கும் விருட்ச ஜாதிகளைக் கண்டு தனக் குள்ளே ஏங்கித் தவிப்பாள் தரங்கிணி. அப்பொழுதெல் லாம் கிரேயின் ''எலிஜி'தான் அவள் ஞாபகத்திற்கு வரும். ''ஆஹா எவ்வளவு அனுபவித்து கிரே பாடியிருக் கிறார்'' என்று தனக்குள்ளே எண்ணிக்கொள்வாள்.

தரங்கிணியின் அழகை அள்ளிப் பருகலாம். அந்தக் காட்டில் அவள்கூடப் பூத்துக் குலுங்கும் ஒரு மல்லிகை மலர், நல்ல மணம் வீசும் காட்டு ரோஜா! இது அவளுக்கு எப்படித் தெரியும்?

தாழைப் புதரில் செழித்து வளர்ந்திருந்த தாழம்பூ மடல் மடலாகச் சர்வோத்தமன் பங்களாவுக்கு ஒருநாள் வந்து குவிந்தது. தாழம்பூவைப் பார்த்தவுடன் அத்தைக் கிழவியின் கைகள் துடி துடித்தன. வயதான கிழவி யவள். தன்னுடைய ஆயுசு காலத்தில் பதினாறும் பெற் றுப் பெருவாழ்வு வாழ்ந்தவள். அவளுடைய கைகளால் எவ்வளவோ பெண்களுக்குப் பூ வைத்துப் பின்னி அழகு பார்த்திருக்கிறாள். அவள் கைப்பட்ட கூந்தலுக்குத் தான் மகிமை அதிகம் என்ற எண்ணம் அவளுக்கு எப் போதும் உண்டு. தாழம்பூவைப் பார்த்தவுடன் அதைத் தரங்கிணியின் தலையில் சூட்டவேண்டும் என்ற அவா பிறந்துவிட்டது அவளுக்கு.

தரங்கிணியிடம் தன் ஆசையைத் தெரிவித்தாள்.

தரங்கிணிக்கு என்ன? தலையை அசைத்துவிட்டாள். தலையை அசைக்கும்போது அவள் குண்டலங்களும் அசைந்தன. அந்த அசைவின் குழைவில் தரங்கிணியின் அழகு கொஞ்சம் எடுப்பாகவே இருந்தது. அதற்குக்

கூடக் கண் விழுந்துவிடும் என்று அத்தைக் கிழவி பயந்து விட்டாள். நெற்றியில் கைவைத்து 'மளுக்'கென்று விரல் களைச் சொடுக்கிக் கொண்டாள்.

சாரட்டின் சாட்டையைப்போல் நீண்டு தொங்கிக் கொண்டிருந்த பின்னல் முறுக்கு ஒவ்வொன்றிலும் தாழம் பூவைச் செருகி வெகு நேர்த்தியாக அவள் கூந்தலை அலங் கரித்துவிட்டாள் அத்தை. நெட்டி போல் நடுமுதுகில் நீண்டு தொங்கிக்கொண்டிருந்த பின்னல், தோள்பட்டை யிலே அசைந்தாடும் நீல நிறத் தாவணியுடன் போட்டிப் போட்டுப் பார்ப்பவர் கண்களுக்குப் பரவச மூட்டும்படி யிருந்தது. தாழம்பூவின் மணம் 'கம்'மென்று பங்களா முழுவதும் வீசிற்று.

தரங்கிணியின் ஜடையலங்காரத்தைக் கண்டு சர்வோத்தமனே சொக்கிப்போனுர். பெண்களின் கூந்த லைப் பாடிப்பாடி அனுபவித்த மகா கவிகளின் மனநிலை அப்போதுதான் அவருக்குத் தெள்ளெனப் புரிந்தது. தரங்கிணியின் முகாரவிந்தமே சந்திரபிம்பம். அதற்கு எடுப்பாக அமைந்திருந்த கூந்தலும் அதன்மீது ஒளி யிட்டுப் பிரகாசிக்கும் தாழம்பூவும் சர்வோத்தமன் உள் ளத்தில் ஒரு கிலுகிலுப்பைத்தான் உண்டுபண்ணிற்று. அப்போது இப்படித்தான் அவர் மனைவி கல்யாணமான புதிதில் தாழம்பூவை வைத்துக்கொண்டு மணவறையில் முதன்முதல் சர்வோத்தமனைச் சந்தித்தாள். மனைவியைக் கண்டவுடன் சர்வோத்தமன் பூரித்துப்போனுர். அவள் பின்னலை பிடித்திழுத்து அதன்மீது பொருத்தப்பட் டிருந்த தாழம்பூ மடல் ஒவ்வொன்றையும் நெருடிக்கொண் டிருந்தார். அப்பொழுது அவர் மனைவி கொஞ்சங்கூட நெகிழ்ந்து கொடுக்கவில்லை. 'இன்னும் இன்னும் அப்ப டியே நெருடுங்கள்' என்று சொல்வதைப் போல் வெகு

அநுசரணையாகத் தலையை அவர் பக்கம் சாய்த்துக்கொண்டிருந்தாள். சர்வோத்தமனுக்குத் தேகமெல்லாம் அப்பொழுது புல்லரித்தது. அவர் மிக்க உணர்ச்சியோடு அவள் முகத்தைத் தன் பக்கம் திரும்பிக்கொண்டார்......பல வருடங்களுக்கு முன் நடந்த அந்தக் காட்சி இப்போது நடப்பதைப்போல் சர்வோத்தமன் கண்முன் வந்து நின்றது. காட்சி மறைந்தவுடன் சர்வோத்தமன் கண்களிலிருந்து கண்ணீர் மள மளவென்று பெருகிவிட்டது. தரங்கிணி அவள் அம்மாவின் அசல் அச்சு அல்லவா?

தந்தையைப் பார்த்த தரங்கிணி திடுக்கிட்டுப் போனாள். "அப்பா எதற்காக உங்கள் கண்கள் சிவந்திருக்கின்றன? கண்ணீர் கண் முழுவதும் மறைத்துக் கொண்டு நிற்கிறதே?" என்றாள் தழதழத்த குரலில்.

சர்வோத்தமன் என்ன பதில் கூறுவார்? கண்களைக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டே 'ஒன்றுமில்லையம்மா' என்று கூறி மழுப்பிவிட்டார்.

தரங்கிணியை வைத்தகண் வாங்காமல் பார்த்திருந்த திருஷ்டிதானோ என்னவோ தரங்கிணி தாழம்பூவை வைத்துப் பின்னிக்கொண்டவுடன் கலகலப்பாக இல்லை. முகத்தைச் சோப்புப் போட்டுக் கழுவிக்கொண்டு வந்தவள், "அத்தைதலையை லேசாக வலிக்கிறது. மாடிக்குப் போய்ப் படுத்துக்கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு மாடிக்குச் சென்றுவிட்டாள்.

ஒரு மணி நேரம் கழிந்திருக்கும். சர்வோத்தமன் 'தரங்கிணீ' என்று கூப்பிட்டுக்கொண்டே பங்களாவிற்குள் நுழைந்தார். அத்தை விஷயத்தைக் கூறியவுடன் சர்வோத்தமன் ஒரே தாவாக மாடிப்படிகளைத் தாண்டிக் கொண்டு மாடியறைக்குச் சென்றார்.

மாடியறையில் கட்டிலில் படுத்திருந்த தரங்கிணியைக் கண்டவுடன் சர்வோத்தமன் தேகத்திலிருந்த ரத்தமெல்லாம் உறைந்துவிட்டது. நெற்றியின் கீழே பக்கங்களுக்கு ஒன்று வீதம் புதைத்திருந்த கண்கள் பிதுங்கி வெளிவந்துவிட்டன போலிருந்தது. தேகத்திலிருந்த அத்தனை ரோமங்களும் குத்திட்டு நின்றன.

தரங்கிணி கட்டிலின் ஓரத்தில் ஒருக்களித்துப் படுத்துக்கொண்டிருந்தாள். அவளுடைய நீண்ட கேசம் முதுகிலிருந்து தோள்பட்டை வழியாகச் சரிந்து தரையில் புரண்டுகொண்டிருந்தது, தரையிலிருந்து புறப்பட்ட பின்னல் நுனியிலிருந்து தரங்கிணியின் உச்சந்தலைவரை ஒரு நாகப் பாம்பு பின்னலோடு பின்னலாகப் படுத்திருந்தது. படமெடுத்து நின்ற அந்த நாகப் பாம்பின் தலை தரங்கிணியின் தலை உச்சியில் ஜடைபில்லை வைத்தது போல் ஒட்டியிருந்தது. தாழம்பூவின் வாசமோ கம்மென்று அறை முழுவதும் வீசிற்று.

சர்வோத்தமனுக்கு ஒன்றும் புரியவில்லை. தரங்கிணி அயர்ந்த நித்திரையில் இருக்கிறாள் என்று மட்டும் தெரிந்தது. ஆனால், அந்தப் பாம்பு? அதை எப்படி விரட்டுவது? தாழம்பூவின் வாசனை என்றால் பாம்பிற்கு வெகுப் பிரியம் என்பது அவருக்குத் தெரியும் அவள் தலையைக் கொஞ்சம் அசைத்தாலும் போதும்; உச்சந்தலையை அது தீண்டிவிடும். என்ன செய்வது?

யோசிப்பதற்கு இது நேரமில்லை என்பதைச் சர்வோத்தமன் நன்கு அறிவார். தரங்கிணி எழுந்திருப்பதற்குள் ஏதாவது செய்தாக வேண்டும். என்ன செய்வது?

டேவிட் அருமையான ஒரு யோசனை கூறினான். "சார் இந்த ஊரின் கோடியிலுள்ள சிறு ரங்கநாதர் கோவில்

அருகே மகுடி ஊதுபவன் ஒருவன் இருக்கிறான். அவனை அழைத்துக்கொண்டு வருகிறேன். கைதேர்ந்த பாம்பாட்டியவன்; பாம்பை எப்படியும் ஓட்டி விடுவான்'' என்றான்.

சர்வோத்தமன் அதற்கு ஒப்புக்கொள்ளவே டேவிட் அவனை யழைத்துவர ஓடினான்.

சிறிது நேரம் கழிந்தது. மகுடி ஊதுபவன் மகுடியுடன் வந்து சேர்ந்தான். அறைக்கு வெளியே இருந்து மகுடியை ஊத ஆரம்பித்தான்.

மகுடியின் நாதம் கேட்கக் கேட்கப் பாம்பு படமெடுத்துத் தரங்கிணியின் தலையின்மீதே ஆடிக்கொண்டிருந்ததே யொழிய தலையை விட்டுக் கீழே இறங்குவதாகக் காணோம்.

பாம்பாட்டி தன் உடலிலுள்ள அத்தனை சக்தியையும் சேர்த்துக் காற்றாக்கி மகுடி ஊதினான்... ஊதிக்கொண்டே இருந்தான். மகுடியிலிருந்து வெளிப்பட்ட நாதத்தில் மயங்கி, பாம்பு படமெடுத்து ஆடியதே யொழிய தரங்கிணியின் பின்னலைவிட்டு இறங்கி வர மறுத்தது. தன் தலையைத் தூக்கித் தூக்கித் துரிதமாகப் படமெடுத்தது பாம்பு. அரச மரத்திற்கு அடியில் பிரதிஷ்டை செய்திருக்கும் நாகச் சிலைபோல் தன் உடலைச் சிறிது நேரம் தூக்கி நின்றது; மறுபடியும் பின்னலிலேயே படுத்துக் கொண்டது.

தரங்கிணி மகுடியின் நாதங் கேட்டு மெல்ல கண் விழித்தாள், கதிகலங்கிப் போனாள்......சர்வோத்தமன், 'அசையாதே தரங்கிணி' என்று மெல்லிய குரலில் எச்சரித்தார்; ரத்தம்போல அவர் முகம் சிவந்துவிட்டது.

சர்வோத்தமனுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை.

பாம்பாட்டி மட்டும் ஊதிக்கொண்டே இருந்தான். ஒரு மணி நேரம் ஊதி, மகுடியின் நாத ஒலியின் உச்சிக் கட்டம் வந்தபோதுதான் பாம்பு மெதுவாகப் பின்னலை விட்டு இறங்கி மகுடியின் பக்கம் திரும்பிற்று. மகுடிக் காரன் வாய் 'பொம்' என்று உப்பிவிட்டது. புன்னகை வராளியைப் பொழிந்து தள்ளினுன் அவன். பாம்பு மெது வாக நகர்ந்து நகர்ந்து மகுடிக்காரன் வலது கையில் ஏறிச் சுற்றிக்கொண்டது. தலையை வாத்தியத்தின் அருகில் கொண்டுபோய் நாதத்திற்கு ஏற்ப ஆடி மகுடியை அனு பவித்தது.

வியர்வையில் குளித்த தரங்கிணி 'அப்பா' என்று கூவிக்கொண்டே ஓடிவந்து சர்வோத்தமனைக் கட்டிக் கொண்டாள். அவர் மார்பில் தலையைப் புதைத்துக் கொண்டு விசித்து விசித்து அழ ஆரம்பித்துவிட்டாள்.

பாம்பாட்டியும் மனிதன்தானே! எவ்வளவு நேரம் ஊதுவான். அவனுடைய மூச்சுக் குழல் தளர்ந்து தடித்து விட்டது; சுவாசப் பையிலிருந்து காற்று வர மறுத்தது. காற்று இருந்தால்தானே வரும். கண்கள் சுழன்று சொருக மயங்கிச் சாய்ந்துவிட்டான் அவன்.

நாகப்பாம்பு 'பொட்'டென்று அவன் முன்னங் கையில் தீண்டிவிட்டுச் சர சரவென்று ஓடிவிட்டது.

அவ்வளவு அழகாக அவன் மகுடி ஊதினதற்காக நாகம் கொடுத்த முத்தம் அது!

கிழவன் வாயில் நுரை தள்ளிற்று. சர்வோத்தமன் கொடுத்த முதலுதவியும் பயனில்லாமல் போய்விட்டது.

தரங்கிணிக்கு ஏற்படவிருந்த பெரும் ஆபத்து கிழவ னேடு போயிற்று.

* * *

"என்ன கிழவன் இறந்துபோனானா?" என்றேன் நான் பரபரப்புடன்.

"இறக்கவில்லை ஐயா? அன்றுதான் அவன் பிறந்தான். இல்லாவிட்டால் அவன் சிலை இங்குப் பொறிக்கப்படுமா?" என்றார் கொச்சி பாகவதர்.

எனக்கு எல்லாமே பிரமிப்பாக இருந்தது. பாம்பாட்டி அறிந்து செய்தானோ, அறியாமல் செய்தானோ. அவன் உயிர் மற்றோர் உயிரைக் காப்பாற்ற உபயோகப் பட்டது.

அதுவரை தியாகம்தானே! அதற்குச் சிலையென்ன கோபுரமே எழுப்பலாம் என்று மனத்திற்குள் நினைத்துக் கொண்டேன்.

# ஒரு ஜோடி வளையல்

ரங்கசாமி எதிர்பார்த்தபடியே அவனைக் கும்ப கோணத்திற்கு மாற்றி விட்டார்கள். சென்னையில் வேலையை ஒப்புக்கொண்ட தினத்தில் இருந்து கும்ப கோணத்திற்குத் தன்னை மாற்றவேண்டும் என்று அவன் கேட்டுக்கொண்டிருந்தான்.

கும்பகோணம் வந்த பிறகு ரங்கசாமியின் வாழ்க்கை அமைதியாகப் போய்க்கொண்டிருந்தது என்றே சொல்ல வேண்டும். சென்னையில் இருந்தவரை ஒவ்வொரு மாதமும் பணம் போதாமல் கஷ்டப்பட்ட அவனுக்குத் தன் சொந்த வீட்டிற்கு வந்தவுடன், வாடகைப் பணம் வரையில் மிச்ச மாயிற்று.

"இதோ பார், கமலா! பட்டணத்தில் இருந்த வரையில்தான் பணம் போதவில்லை, பணம் போதவில்லை என்று அழுது கொண்டிருந்தாய். இப்போது கும்ப

கோணம் வந்தாய்விட்டது. வீட்டுக்கு வாடகைகூடக் கிடையாது. அதனுல் அந்த ரூபாய் இருபத்தைந்து மிச்சம். இனிமேலாவது மாதா மாதம் வருவாய்க்குத் தகுந்தபடி செலவு செய்ய வேண்டும், தெரிகிறதா?'' என்முன், ஒரு நாள் தன் மனைவியிடம்.

கொஞ்ச நேரம் கமலா பேசாமல் இருந்துவிட்டு, "நான் என்ன, கண்டபடி எல்லாமா செலவு செய்கிறேன்? பட்டணத்தில் இருந்தவரை நீங்கள் தான், 'தாம், தூம்'னு செலவு செய்தீர்கள். சம்பளப் பணத்தை என்னிடம் கொடுத்திருந்தால் அங்குக்கூட நான் மிச்சம் பிடித்துக் காட்டியிருப்பேனே?'' என்ருள்.

அவள் சொல்வதில் என்னவோ உண்மை இருந்தது. செலவு இனங்களில் அவள் குடும்பப் பொறுப்பை ஏற்ற சமயத்திலிருந்து சிக்கனமாகவேதான் இருந்தாள். ஒன்று என்ற இடத்தில் பாதிதான் செலவு செய்வாள். ஆனுல், ரங்கசாமி தன் போக்கில் காரியங்களைச் செய்து கொண்டு போனதனுல் அவளால் ஒன்றும் செய்ய முடியாமல் இருந்தது.

கும்பகோணம் வந்து நாலைந்து மாதங்கள் ஆன பிறகு, ஒருநாள் ரங்கசாமி வீட்டு வரவு செலவு கணக்குகளைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

"என்ன, கணக்கு வழக்குகளை எல்லாம் பார்க்கிறீர்களே, எவ்வளவு மிஞ்சியிருக்கு?'' என்று கேட்டாள் கமலா.

"எவ்வளவு மிஞ்சியிருக்கா? நீயும் நானும்தான் மிஞ்சியிருக்கோம், கும்பகோணம் வந்து ஒரு பிரயோசனமும் இல்லை. காவேரியில் ஸ்நானம் செய்தது ஒன்றுதான் லாபம்...!''

"ஒண்ணும் மிஞ்சலேயா? வாடகைப் பணத்தை அப்படியே பாங்கியில் போடப் போவதாகச் சொன்னேளே, போடவில்லையா? நீங்கள் போட்டு வரதாக நினைச்சிண்டு இருக்கேனே?"

"மாசா மாசம் பாங்கியிலே போட்டுண்டு வந்தது என்னவோ வாஸ்தவம்தான். ஆனால், மாசா மாசம் அதை எடுத்துச் செலவு செய்யறது உனக்குத் தெரியாதா?"

கமலா கண்களில் கண்ணீர் வந்துவிட்டது. "நீங்கள் பணத்தைப் பாங்கியிலே போட்டு வைக்கிறதற்காக எவ்வளவு பெருமை பட்டுண்டு இருந்தேன்? கணிசமா பணம் சேர்ந்த பிறகு ஒரு ஜோடி தங்க வளையல் வாங்கிப் போட்டுக் கொள்ளலாம்னு நினைச்சேன். அவ்வளவுதான் என் அதிர்ஷ்டம்."

"நீயும்தான் ஒரு ஜோடி தங்க வளையல்கள் ரெண்டு வருஷமா கேட்டுண்டு இருக்கே. நானும், ஆகட்டும் ஆகட்டும்னு சொல்லிக்கொண்டு வரேன். வேளையும் பொழுதும் வந்தாத்தானே!"

"நினைச்சாதானே வேளையும் பொழுதும் கூடிவரும்? போன வருஷம் உங்கள் அக்காவுக்கு இருநூறு ரூபாயில் பட்டுப்புடைவை எடுத்து அனுப்பினீர்கள். அதற்கு மட்டும் பணம் எங்கிருந்து வந்ததோ? என்னிடம் கடன் வாங்கினதாகப் பொய் சொன்னீர்கள். எதுக்கும் நான் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா?"...கமலாவின் கண்களில் கண்ணீர் ததும்பிற்று. 'விடுவிடு'வென்று சமயலறைப்பக்கம் சென்றுவிட்டாள்.

ரங்கசாமியின் மனம் இளகிவிட்டது. கமலா இரண்டு வருஷங்களாகவே ஒரு ஜோடி தங்க வளையல்கள் கேட்டுக்கொண்டிருக்கிறாள். அதை வாங்குவது அப்படி

யொன்றும் பிரமாதமில்லை, அதிகம் போனால் முந்நூறு ரூபாய்க்குமேல் இருக்காது. ரங்கசாமிக்குக் கமலாவின் ஆசையை நிறைவேற்ற வேண்டும் என்பதுதான். ஆனால், அது ஏனோ தள்ளிக்கொண்டே போகிறது!

"கமலா...கமலா!" என்று கூவிக்கொண்டே ரங்கசாமி அவளைச் சமாதானம் செய்ய உள்ளே ஓடினான்.

"இதோ பார், எங்க அக்காவுக்கு பட்டுப்புடைவை வாங்கிக்கொடுத்தேன் என்றால் சாதாரணமாகவா செய்தேன்? சந்தோஷ சமாசாரம் தெரிவித்துக் கடிதம் எழுதியிருந்தாள். அந்தச் சமயத்தில் அவள் ஆசையாகக் கேட்டு எழுதியதை வாங்கிக் கொடுக்காமல் இருந்தால் நன்றாயிருக்குமா?"

ரங்கசாமியின் தமக்கை கருத்தரித்திருக்கிறாள் என்ற சந்தோஷ சமாசாரம்தான் அது. அந்தக் கடிதத்தைப் பார்த்தவுடன் ரங்கசாமிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ஒரு திருவிழாவாகவே அதைக் கொண்டாடினான். கல்யாணமாகிப் பத்து வருடங்கள் ஆகியும் அவளுக்குப் புத்திரப்பேறு உண்டாகவில்லை. ரங்கசாமிக்கும் மணமாகி ஐந்து ஆண்டுகள் ஆகின்றன. அவனுக்கும் பிள்ளைப் பேறு இல்லை. உறவு மனிதர்கள் இதைப்பற்றியெல்லாம் 'கச முச' என்று பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் இந்தச் சேதி வந்தபோது, அவள் ஆசையாகக் கடிதத்தில் கேட்டிருந்த் பட்டுப் புடவையை வாங்கி அனுப்பிவிட்டான்.

கமலாவுக்கும் இதெல்லாம் தெரிந்துதான் இருந்தது ஆனால், அவள் என்ன செய்வாள்?

## 2

"நீங்கள் வளை பண்ணிப் போடாவிட்டால் நான் ஊருக்குக் கடிதம் எழுத வேண்டியதுதான்" என்றாள் கமலா, ரங்கசாமியிடம் ஒரு நாள்.

"ஏன், தாராளமாக எழுதேன்! உங்க அப்பாவோ, அண்ணனோ உனக்கு நகை பண்ணிப் போடுவதை நானா வேண்டாம் என்று சொல்கிறேன்?" என்று எரிந்து விழுந்தான் பதிலுக்கு ரங்கசாமி.

"கேட்டால் எதற்காக இப்படிக் கோபிக்கிறீர்கள்? இப்போதெல்லாம் நான் எது கேட்டாலும் இப்படித்தான் எரிந்து விழுகிறீர்கள்!..." என்று சொல்லிக்கொண்டே கமலா உள்ளே போய்விட்டாள்.

கமலா சாமர்த்தியமான பெண். கும்பகோணம் வந்த பிறகு அவள் குடும்பச் செலவைப் பல விதத்திலும் குறைத்துப் பணத்தை மீதப் படுத்தி வந்தாள். கொஞ்சங் கொஞ்சமாகச் சேர்த்து வைத்த பணம், கடைசியில் கணக்குப் பார்த்தபோது முந்நூறு ரூபாயும் சில்லறையுமாக இருந்தது.

திடுதிப்பென்று அதை ரங்கசாமியிடம் கொடுத்து, அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்தவேண்டும் என்று தான் கமலா நினைத்தாள். ஆனால் அப்படிச் செய்ய அவள் மனம் இடம் கொடுக்கவில்லை. ரங்கசாமியின் தமக்கையின் சீமந்த சமயம் அது. பணத்தை அவன் அதற்கு உபயோகப்படுத்திக்கொண்டுவிட்டால் என்ன செய்வது என்று அவனிடம் ஒன்றும் பிரஸ்தாபிக்காமல் இருந்துவிட்டாள்.

கும்பகோணம் ராமசாமிப் பத்தரைக் கமலாவுக்கு நன்றாகத் தெரியும். நாணயமான பேர்வழி என்று அவர்மீது எல்லோருக்குமே ஒருவித நம்பிக்கை.

எனவே, கமலா ஒரு நாள் மத்தியானம் பணத்தை எடுத்துக்கொண்டுபோய், ராமசாமிப் பத்தரிடம் கொடுத்து ஒரு ஜோடி தங்க வளையல்கள் செய்து கொடுக்க 'ஆர்டர்' கொடுத்து விட்டாள். "பத்தரே, நகை செய்யும் விவரம் நமக்குள் இருக்கட்டும். ஐயாவுக்குத் தெரிய வேண்டாம்" என்று கமலா சொன்னதைப் பத்தரும் புரிந்துகொண்டு, நகை செய்து கொடுப்பதாக ஒப்புக்கொண்டுவிட்டார்.

வளையல்கள் செய்யக்கொடுத்த பிறகுதான் கமலாவின் தேகத்தில் நடுக்கம் கண்டது. தன்னுடைய கணவனுக்குத் தெரியாமல் இப்படி ஒரு காரியம் செய்தோமே! நாளைக்குத் தெரிந்துவிட்டால், தன்னைப்பற்றி என்ன நினைப்பாரோ என்ற எண்ணம் தோன்றியபோது அவள் உடல் நடுங்கியது. அவருக்குத் தெரியாமல் நகை கைக்கு வந்துவிட்டால், பிறந்தகத்திலிருந்து வந்தது என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம் என்று, முன் கூட்டியே அடிக்கடி ரங்கசாமியிடம் அவள், "பாருங்களேன்! எங்கப்பா ஒரு நாள் வளையல் பண்ணி அனுப்பி வைக்கப் போகிறார்!" என்று சொல்லிக்கொண்டு வந்தாள்.

ரங்கசாமி என்னவோ கமலாவின் வார்த்தைகளில் நம்பிக்கை வைக்கவில்லை "பைத்தியம் உளறுகிறது!..." என்று தான் இருந்தான்.

## 3

ராமசாமிப் பத்தர் வளையல் கொடுப்பதாகச் சொன்ன கெடு தாண்டி ஒரு வாரமாயிற்று. நகை வந்து சேரவில்லை. கமலாவுக்கு இதே பெரிய கவலையாக இருந்தது.

ஒரு நாள் காலை வாசலில் சங்கு ஊதிற்று. கமலா வெளியில் வந்து பார்த்தாள். அவள் வயிறு பகீரென்றது. ராமசாமிப் பத்தரின் மூத்த பிள்ளை கண்ணுச்சாமி நெருப்புச் சட்டியுடன் போய்க்கொண்டிருந்தான். அவன் பின்னே ராமசாமிப் பத்தரின் சடல 'ஊர்வலம்' வந்தது.

ராமசாமிப் பத்தர் இறந்துவிட்டார் என்ற விஷயம் கமலாவுக்கு நிதர்சனமாகத் தெரிந்தபோது அவள் உள்ளம் படாத பாடுபட்டது. சுற்றி நின்ற பொருள்கள் அவ்வளவும் சுழல்வதுபோல் இருந்தன. தெருவில் போவார் வருவார் யாரும் அவள் திருஷ்டியில் படவில்லை. எல்லாமே சூன்யமாய் இருந்தது. "நகை ..நகை, அதைப்பற்றி மேற்கொண்டு என்ன செய்வது?" என்ற எண்ணம் அவளுடைய இதயத்தை உலுப்பிய வண்ணமிருந்தது. "நாம் ஏன் புத்திகெட்டு, கணவனுக்குத் தெரியாமல் நகை செய்யக் கொடுத்தோம்?" என்று அவளுடைய மனம் துடித்தது.

ஒரு வேளை ராமசாமிப் பத்தரின் பையன் யோக்கியமாகக் கொடுத்துவிட்டால்...இந்த ஒரு சபலமும் அவளுக்கு இருந்தது.

உள்ளே வந்த கமலாவுக்குப் பித்துப் பிடித்துவிட்டது. எதிலும் மனம் ஓடவில்லை. வீட்டுக் காரியங்கள் எல்லாம் போட்டது போட்டபடி இருந்தன.

ரங்கசாமி மாலையில் திரும்பியவுடன் வீடே வெறிச்சோடிக் கிடந்ததைக் கவனித்தான். கமலாவின் முகத்தை அவனுக்குப் பார்க்கவே சகிக்கவில்லை. அப்படி வீங்கி வெளுத்திருந்தது.

"என்ன கமலா, என்ன சமாசாரம்? ஏன் ஒரு மாதிரியாய் இருக்கே? ஊரிலிருந்து ஏதாவது கடிதம் வந்ததா?" என்று கேட்டான் பரபரப்புடன்.

கமலாவுக்கு என்ன பதில் சொல்லுவது என்று தெரிய வில்லை. 'ஹோ'வென்று வாய் விட்டுக் கதற வேண்டும் போல் இருந்தது அவளுக்கு. நடந்தவை எல்லாவற்றையும் ரங்கசாமியிடம் சொல்லலாம் என்ருலோ அவளுக்குத் தைரியமில்லை. அதனுல், "ஒன்றுமில்லை, தலை லேசாக வலித்தது. படுத்துக்கொண்டிருந்தேன்" என்று சொல்லி சமாளித்துக் கொண்டாள்.

கமலாவுக்கு அன்று இரவு ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகமாகப் போய்க்கொண்டிருந்தது.

அவளுக்கு, ராமசாமிப் பத்தர் இறந்த மறு நாளே அவர் வீட்டுக்குச் சென்று நகை விவரம் அறிந்து வரவேண்டும் என்றிருந்தது. ஆனல், அது அவ்வளவாக நன்ருயிராது என்று இரண்டு மூன்று தினங்கள் கழித்து ஒரு நாள் பிற்பகல் பத்தர் வீட்டுக்குச் சென்ருள்.

அங்கு இன்னொரு திடுக்கிடும் செய்தி அவளுக்காகக் காத்திருந்தது ராமசாமிப் பத்தர் வீடு இழுத்துப் பூட்டப் பட்டிருந்தது. அண்டை வீடுகளில் விசாரித்துப் பார்த்த தில், 'பத்தர் இறந்தவுடன், குடும்பத்தில் ஏக ரகளை நடந்து, எல்லோரும் ஊரோடு போய்விட்டார்கள்" என்று சொன்னர்கள்.

கமலாவுக்கு அந்தச் செய்தி 'சுரீர்' என்று தைத்தது. ஆயிரம் தேள்கள் ஒரே சமயத்தில் கொட்டுவது போன்ற வேதனை ஏற்பட்டது. "பெண்புத்தி பின் புத்தி என்பது சரியாகப் போய்விட்டதே! நான் அசட்டுத் தைரியத் தில் அவருக்குத் தெரியாமல் செய்த காரியம் இப்படித்தான முடிய வேண்டும்?" என்ற எண்ணம் மீண்டும் அவள் உள்ளத்தில் தோன்றி சித்திரவதை செய்தது.

வீட்டிற்கு வந்த கமலாவுக்குத் தன் பேரிலேயேகூட ஆத்திரம் வந்தது. தனக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும் என்று தன்னேயே நொந்துகொண்டாள். "அவருக்குத் தெரியாமல் ஐந்தும் பத்துமாகப் பொய்க் கணக்குக் காட்டிச் சேர்த்த பணம் இப்படித்தானு போக வேண்டும்?" என்ற எண்ணம் வலுப் பெற்றபோது, கணவனுக்குத் துரோகம் செய்து விட்டோமே என்று துக்கம் தாங்க முடியாமல் வந்தது.

அன்று மாலை வெகு உற்சாகத்தோடு வீடு திரும்பிய ரங்கசாமி, கமலாவைக் கண்டதும் துணுக்குற்ருன். "என்ன கமலா, இப்போதெல்லாம் நீ ஒரு மாதிரியாக இருக்கிருய்? சிரிப்பே உன் முகத்திலிருந்து மறைந்து விட்டதே! நான் ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்லவேண்டும் என்று வந்தால் நீ இப்படி முகத்தை வைத்துக்கொண்டிருக்கிருயே?" என்ருன் கவலேயோடு.

கமலா பதில் பேசவில்லே. கண்கள்கூடச் சலன மற்றிருந்தன.

"இதோ பார்! நீ சிரித்தால்தான் நான் சமாசாரத்தைச் சொல்லுவேன். எங்கே சிரித்துக்கொள் பார்க்கலாம்!" என்று குழந்தைகளுக்கு விளேயாட்டுக் காட்டுவது போல் அவள் முகவாய்க் கட்டையை ரங்கசாமி வருடிய போதுதான் கமலாவுக்குச் சுய நினேவு வந்தது. லேசாகச் சிரித்தாள்.

அவள் சிரித்ததற்கு மற்ெருரு காரணமும் இருந்தது என்று சொல்லலாம். ரங்கசாமி சந்தோஷ சமாசாரம் என்ருனே, ஒருவேளே நகையைப்பற்றி ஏதாவது இருக்குமோ? "சீச்சீ! இனி நகையைப்பற்றி மனத்தால்கூட நினேக்கக்

கூடாது. போதும் இதுவரை பட்ட அவஸ்தை!" என்று தீர்மானித்தாள்.

"என்ன கமலா பிரமாத யோசனை? சந்தோஷ விஷயம் என்றால், என்ன என்ன என்று தொந்தரவு செய்வாயே? இப்போது...அது சரி. உங்கப்பாவிடமிருந்து நகை வரப்போகிறது என்றாயே; தகவல் ஏதாவது வந்ததா? இன்னும் நகை செய்யாமலிருந்தால் பணமாக அனுப்பிவிடச் சொல்லேன்! பாங்கியில் முந்நூறு ரூபாய் 'செக்யூரிடி' கட்டினால் 'காஷ் டிபார்ட்மெண்'டில் நாளைக்கே எனக்கு 'ப்ரமோஷன்' இருக்கிறது. இருநூறு ரூபாய் கைவசம் இருந்தால் போதும்" என்றான்.

"பெரிய வேலை என்று வந்தால் விடுவாளோ? எங்கேயாவது பணத்தைப் புரட்டிக் கட்ட வேண்டியதுதான்" என்றாள் கமலா. தைரியமாகப் பதில் சொல்லி விட்டாளே தவிர அவளுடைய அந்தராத்மா அவளைச் சித்திரவதை செய்தது. சேர்த்து வைத்திருந்த பணம் மட்டும் இப்போது கைவசம் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று எண்ணி ஏக்கமுற்றாள்.

## 4

ஒரு வாரமாயிற்று. கமலா நகையைப் பற்றியவைகளையெல்லாம் மறந்துவிட்டாள் என்றே சொல்லலாம். அந்த எண்ணங்கள் உதயமாகும்போது தன்னை மற்றக் காரியங்களில் ஈடு படுத்திக்கொண்டு, அதை மறக்க முயற்சித்து வெற்றியும் கண்டு வந்தாள். பணம் இருந்திருக்கும் பட்சத்தில் கணவனுக்கு நல்ல வேலை ஆகியிருக்குமே என்ற எண்ணம்தான் அவள் உள்ளத்தில் நிலைபெற்றுப் போயிருந்தது. நகை நகை என்ற ஆசையில் ஏமாந்து விட்டோமே என்று மனம் புழுங்கினாள்.

அன்றிரவு ரங்கசாமி ஆபீஸிலிருந்து சற்றுத் தாமத மாக வீட்டுக்கு வந்தான். அவன் முகத்தில் உற்சாகமும் குதூகலமும் போட்டி போட்டுக்கொண்டிருந்தன.

"கமலா, இங்கே ஓடிவா!" என்று கூப்பிட்டுக் கொண்டே அவள் கையில் ஒரு பெரிய பொட்டலத்தைக் கொடுத்தான்.

கமலா பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தபோது அதில் 'தக தக'வென்று மஞ்சள் வர்ணத்தில் ஒரு பட்டுப் புடைவை மின்னிக் கொண்டிருந்தது. கமலா அதைப் பார்த்து முடிப்பதற்குள் இன்னொரு சிறு பெட்டியை நீட்டினான் ரங்கசாமி. அதில் ஒரு ஜோடி தங்க வளையல் பிரகாசித்துக்கொண்டிருந்தன.

கமலாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. மலர மலர விழித்துக்கொண்டிருந்தாள்.

"என்ன கமலா! வாயடைத்துவிட்டது! பேசமுடிய வில்லையா?" என்றான் ரங்கசாமி மகிழ்ச்சி பொங்க.

"இதெல்லாம் ஏது......எப்போது வாங்கிண்டு..?"

"திடுதிப்பென்று ஒன்றும் செய்யவில்லையே! புடை வைதான் இப்போ வாங்கிண்டு வந்தேன். வளைதான் நீ ஒரு மாசத்துக்கு முந்தியே 'ஆர்டர்' கொடுத்து வைத்திருந் தாயே...?"

கமலாவுக்கு 'மளமள'வென்று கண்ணீர் வந்துவிட் டது. ரங்கசாமியின் இரு கைகளையும் சேர்த்துப் பிடித் துக்கொண்டு 'ஹோ'வென்று கதறிவிட்டாள்.

"அட அசடே! ஏதுக்காக இப்படி அழறே? இந்த வளையல் இல்லாதுபோனல் எனக்குப் பெரிய வேலை ஆகி யிருக்குமோ? ராமசாமிப் பத்தர் இறந்த மறுநாளே அவர்

பையன் என்னைப் பார்த்து இந்த வளையல்களைக் கொடுத்து விட்டுப் போனான். வேலைக்கு 'டிபாஸிட்' கட்ட வேண்டும் என்றவுடன் என் கைக்கு வந்த வளையல்களைப் பாங்கியி லேயே அடகு வைத்து 'செக்யூரிடி' கட்டி பெரிய வேலையை வாங்கிவிட்டேன். இந்த மாதம் என் பேருக்குச் சீட்டு ஒன்று விழுந்தது உடனே வளையல்களைப் பாங்கியி லிருந்து மீட்டு, என் கணக்காக இருக்கட்டும் என்று புடைவையொன்றும் எடுத்துக்கொண்டு வந்தேன். வளையல் வாங்கின பணம் நீ கஷ்டப்பட்டுச் சேர்த்த பணம் அல் லவா?''.

கமலாவுக்கு ரங்கசாமியின் பேச்சு இனிப்பாக இருந்த போதிலும், அவன் பேசி முடித்த பிறகு அழுகை பிரமாத மாக வந்துவிட்டது.

''கமலா, எதுக்காக மறுபடியும் நீ அழறே? தவறு செய்யறது எல்லோருக்கும் சகஜம்தானே? அழாதே! கண்களைத் துடைத்துக்கொள். மேலும், உடம்பை அலட் டிக்கொண்டு அழுவதற்கு இதுதானா சமயம்? காலையில் லேடி டாக்டர் என்ன சொன்னார்? உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாது என்று சொல்லவில்லையா?' உனக்கு விருப்பமான பொருள்களை வாங்கிக்கொள்வதற்கு இது தானே தகுந்த சமயம்? போ, புடைவையை உடுத்திக் கொண்டு வளையல்களையும் கைகளில் அணிந்துகொண்டு வா, பார்க்கலாம்!'' என்று ரங்கசாமி சமாதானம் சொன்ன பிறகுதான் கமலாவுக்கு உள்ளத் தெளிவு ஏற் பட்டது. கையில் புடைவையுடனும், வளையல்களுடனும் உள்ளே ஓடினாள்.

# பொம்மைக் கல்யாணம்

கிருஷ்ணனின் உள்ளத்தில் கவலை தோய்ந்துவிட்டது. அப்பாவின் செல்வப் பிள்ளையான அவன் கவலைப் படவே வேண்டாம். இருந்தாலும் பாழும் இதயத்தைப் பறிகொடுத்துவிட்டுப் பரிதவித்துக்கொண்டிருந்தான்.

சென்ற வருடம் அவன் தங்கை கோமதி வீட்டோடு இருந்தபோது அவர்கள் வீட்டில் நவராத்திரி அதி விமரிசையாகக் கொண்டாடினார்கள். ஒன்பது நாட்களும், பொம்மைக் கொலுவுடன் விசேஷ பூஜைகளும், அமர்க்களப்பட்டன. அம்மனைக் கொண்டாடுவதன் மூலம் கோமதிக்கு நல்ல இடத்தில் கலயாணமாகுமென்று அவன் தாயார் பண்டிகையை விமரிசையாகக் கொண்டாடினாள். அவள் நம்பிக்கை வைத்ததன் பலனோ, அல்லது கோமதியின் நல்ல அதிர்ஷ்டமோ, அவளுக்கு நல்ல அகமுடை

யான் கிடைத்தான். கல்யாணம் நடந்த கையோடு அவளைத் தன்னுடன் பம்பாய்க்கு அழைத்துக்கொண்டும் போய்விட்டான்.

இந்த வருடம் நவராத்திரி வருகிறது என்று தெரிந்தவுடன் கோமதியின் தாயார் தர்முவுக்கு அதில் அவ்வளவு அக்கறை விழவில்லை.

ஆனல், நவராத்திரி கொலுவின் அவசியம் கிருஷ்ணனுக்குத்தான் தெரியும். அவனுடைய உள்ளத்தைக் கேட்டால் நாமும் தெரிந்துகொள்ளலாம்.

## 2

**போ**ன வருடம் கோமதி வீட்டில் இருந்தபோது கிருஷ்ணன் நவராத்திரிக்காகப் பத்து நாட்கள் லீவு எடுத்துக்கொண்டான். அப்படி லீவு எடுத்துக்கொண்டது கடைசியில் ஆபத்தாக முடிந்துவிட்டது, ஏனென்ருல், அன்று வரையில் அவனிடம் இருந்த அவன் இதயம், அவனை அறிந்தோ அறியாமலோ இடம் பெயர்ந்து வேறு இடத்திற்குப் போய்விட்டது. அதற்குப் பதிலாக மற்ரேர் இதயம் வந்து குடியேறிற்று. இதயம் 'தடக் தடக்' என்று அடித்துக்கொள்வதிலிருந்து, அது கமலியினுடையதுதான் என்று அவனுக்கு நிதரிசனமாகப் புரிந்தது.

முதல் நாள் கமலி, கிருஷ்ணன் வீட்டிற்கு வந்தபோது அவளுக்கு அமோக வரவேற்பு. "என் காலேஜில் என்னேடு படிக்கிறவள் அம்மா, பாரதியார் பாட்டுக்கள் எல்லாம் ரொம்ப நன்ருகப் பாடுவாள். பிரைஸ்கூட வாங்கியிருக்கிருள்" என்று தன்னுடைய தாய்க்கு அவளை அறிமுகம் செய்வித்தபோது கோமதிக்குப் பெருமை பிய்த்துக்கொண்டு போயிற்று.

கமலி அன்று கொலுவில் இருந்த பொம்மைகளை எல்லாம் வெகுவாகப் பாராட்டினுள். அவளுக்குக் கொலுவில் இருந்த சித்திரக் குளமும், அதன் படித் துறைகளும், நடுவே நின்ற நீராழி மண்டபமும் மிகவும் பிடித்திருந்தன. மனம் லயித்து அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"குளத்தைவிட நீராழி மண்டபம் இன்னும் எடுப்பாய் இருக்கிறது. இந்த 'ஸெட்' என்ன விலை? எங்கள் வீட்டில்கூட ஒன்று வாங்கவேண்டும்" என்ருள் கமலி.

"குளம்தான் விலைக்கு வந்தது. மண்டபம் எங்க அண்ணு செய்தான். அவனுக்கு இந்த மாதிரி வேலைகள் என்ருல் ரொம்பப் பிடிக்கும்" என்ருள் கோமதி பெருமையாக.

கிருஷ்ணனுக்கு இந்தச் சம்பாஷணைகளைக் கேட்கக் கேட்க உடலில் புளகாங்கிதம் ஏற்பட்டது.

கமலி மஞ்சள் குங்குமம் பெற்றுக்கொண்டு தர்முவிடம் விடைபெற்றுக்கொண்டாள். கோமதி அவளை வாசல் பக்கம்வரை கொண்டுவந்து விட்டாள். கமலி கூடத்தைத் தாண்டும்போது, கிருஷ்ணன் அவளை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தான். கமலியும் கிருஷ்ணனைக் கண்டவுடன் தயங்கினுள். அந்த இடத்தில் ஆடவன் ஒருவனும் இல்லை என்றுதான் அவள் நினைத்திருந்தாள். இப்போது கிருஷ்ணனைப் பார்த்தவுடன், இதுவரை இருந்த தெம்பும் துணிச்சலும் எங்கோ போய்ப் புகுந்துகொண்டன. அதற்குப் பதில் எங்கிருந்தோ வெட்கம் வந்து சூழ்ந்துகொண்டது. உடல் முழுவதும் மின்சாரம் பாய்வதைப் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. கடைக்கண் வீழ்ச்சியில் சொக்கிப்போய் நின்ற கிருஷ்ணனே கல்லாய்ச் சமைந்துபோனுன்.

மறுநாள் மாலை கமலி வந்தபோது நீல நிறத்தில் அமைந்த பட்டுப்புடைவை உடுத்தியிருந்தாள். அதற்கு எடுப்பாக வெள்ளை நிற ஜாக்கெட் அமைந்திருந்தது. அன்று அவள் கொலுவுக்கு முன் அமர்ந்திருந்தபோது, அவளுடைய நீண்ட பின்னல் தரையில் நெளிந்து ஓடிக் கொண்டிருந்தது.

அன்று கமலி பாடினாள், அந்தப் பாட்டிற்குக் கிருஷ்ணனின் இதய நாதம் சுருதி போட்டது.

" காதலொருவனைக் கைப்பிடித்தே யவன்
காரியம் யாவினும் கை கொடுத்து
மாதரறங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச் செய்து வாழ்வமடி "

என்று அவள் பாரதி பாடலைப் பாடியபோது கிருஷ்ணனின் உடல் சிலிர்த்தது.

அன்று அவள் வீடு திரும்பும்போது கிருஷ்ணன் வாய்விட்டே அவளைப் புகழ்ந்துவிட்டான். " இன்று உங்கள் பாட்டு பிரமாதம். இம்மாதிரி பாரதியார் பாடல்களைப் பாடி..." என்று முடிப்பதற்குள் கமலி அவனுக்குப் பதில் அளித்துவிட்டாள். ரத்தினச் சுருக்கமான பதில், "ரொம்பத் தாங்க்ஸ்" என்று. அதைத் தொடர்ந்து வீரனொருவன் எய்யும் வாள்போல் கண்களினால் ஒரு வீச்சு. கிருஷ்ணன் மதுவுண்டவன் போல் மயங்கினான்.

நவராத்திரி ஓய்ந்தவுடன் எல்லாமே ஓய்ந்துவிட்டது போல இருந்தது கிருஷ்ணனுக்கு. வேளா வேளையில் சாப்பிடப் பிடிக்கவில்லை. ஆபீஸில் வேலைகள் எல்லாம் 'பெண்டிங்' பைலில் தூங்கின.

கோமதியைத் 'தாஜா' செய்து பார்த்தான். அவளுக்கு விஷயம் பட்டும் படாமலும் தெரியும். எனவே, உண்மையை விண்டு சொல்லிவிட்டாள். " கிருஷ்ணு,

கமலியைப்பற்றிக் கேட்கவேண்டும் என்ருல் தைரியமாகக் கேளேன், அதற்காகச் சுற்றி வளைப்பானேன்? அவள் பம்பாய்க்குப் போயிருக்கிருள். வருவதற்கு நாலைந்து மாதங்கள் ஆகும். எப்படியும் அடுத்த நவராத்திரிக்குள் வந்துவிடுவாள்'' என்று கோமதி சொன்னபோது கிருஷ்ண னுக்குச் சுருக்கென்றது.

## 3

ஏக்கத்திலும் கவலையிலும் மாதங்கள் சென்றுவிட்டன. நவராத்திரி நெருங்குகிறது என்று தெரிந்த தெம்பில் நாட்கள் ஓடின. கடைசியில் 'வீட்டில் கொலு இல்லை' என்பதை அறிந்தபோது கிருஷ்ணனின் மனம் துவண்டுவிட்டது. கமலி ஊரிலிருந்து வந்திருக்கிருள் என்ற விஷயமும் அவனுக்கு எப்படியோ தெரிந்திருந்தது.

"அம்மா, ஏன் கொலு வேண்டாம் என்று சொல்கிருய்?'' என்ருன் கிருஷ்ணன் தன் தாயிடம்.

"நம்ப கோமதியும் வீட்டில் இல்லை. வைப்பதும் எடுப்பதும் என்ருல் எவ்வளவு சிரமம்?'' என்று பதிலளித்தாள் தர்மு.

"உனக்குச் சிரமம் என்ருல் நான் செய்கிறேன். நம்முடைய சிரமத்திற்காகப் பொம்மைகளைப் பட்டினி போடலாமா? அம்பாளுக்கு ஒரு நாள் நிவேதனம் செய்யா விட்டால்...'' வேதாந்தம் பேசினுன் கிருஷ்ணன்.

தர்முவுக்குப் பதி பக்தியோடு தெய்வ பக்தியும் உண்டு. "நீ எல்லாக் காரியங்களையும் செய்கிருய் என்ருல் எனக்கு ஆட்சேபனை இல்லை'' என்று சொல்லி விட்டாள்.

தாயார் கொலுவுக்குத் தடை சொல்லவில்லை என்று தெரிந்தவுடன் கிருஷ்ணனின் தேகமே பெருத்துவிட்டது. உற்சாகத்தின் உத்வேகத்தில் பரபரவென்று படிக்கட்டுக் கள் அமைத்துப் பொம்மைகளை ஏற்றிவிட்டான்.

அன்றையதினம் மாலை கமலி கிருஷ்ணன் வீட்டுக் கொலுவுக்கு வந்தபோது அவள் கையில் ஒரு காகிதப் பொட்டலம் இருந்தது. கிருஷ்ணன் அதையே உற்றுக் கவனித்துக்கொண்டு கூடத்தில் உட்கார்ந்திருந்தான்.

கமலி வழக்கம் போலப் பாடிவிட்டுப் பொட்டலத் தைப் பிரித்தாள். அதில் ஒரு ஜோடி புதுச்சேரி பொம்மை இருந்தது. கையில் குடத்துடன் முகத்தில் புன்முறுவல் தவழ அமைந்த அந்தப் பெண் பொம்மை, கிருஷ்ணனுக்குக் கமலியின் உருவத்தைத்தான் ஞாபக மூட்டிற்று. பொம்மைகளைக் கண்ட தர்மு வைத்த கண் வாங்காமல் அவற்றையே பார்த்துக் கொண்டிருந்தாள். கமலியும் விஷயத்தைச் சொல்வதற்கு ஏற்ற சமயம் இது தான் என்று "வழியில் இப்போதுதான் இந்தப் பொம் மைகளை வாங்கினேன். உங்கள் வீட்டிலும் ஒன்று இருக் கட்டும்" என்று கையிலிருந்த இரு பொம்மைகளில் ஒன்றை எடுத்துப் படிக்கட்டில் வைத்துவிட்டாள். கையில் சுதந்திரக் கொடியுடன் வீரமும் இளமையும் ததும்பி நின்ற தேசத் தொண்டன் ரூபத்தில் அமைத்த பொம்மைக்குப் பக்கத்தில் கொடிபோல் துவளும் உட லமைப்பும், ஒடிந்து விழுவதைப் போன்ற இடுப்பில், குடத்தைத் தாங்கி நின்ற நிலையில் உருவான யுவதியின் பொம்மையைக் கமலி வைத்தவுடன் அவள் கைகள் ஏனோ நடுங்கின; இதயக் கதவு திறந்து கணகணவென்று சப்திப் பது போல் இருந்தது.

கிருஷ்ணன் அந்தப் பொம்மையைப் பார்த்துப் பார்த் துப் பூரித்துப்போனான். அந்த இளைஞனுக்குப் பக்கத்தில்

அந்தப் பெண் பொம்மை கம்பீரமாக நின்ற காட்சி மணப் பந்தலில் தானும் கமலியும் சேர்ந்து நிற்பதைப் போலத் தான் அவனுக்குத் தோன்றிற்று.

ஆனால் மறுநாள்—என்ன அதிசயம்!—கொலுவில் இருந்த கமலி கொடுத்த அந்த பொம்மை, அந்த இளைஞ னுக்குப் பக்கத்தில் காணவில்லை. கிருஷ்ணன் திடுக்கிட் டுப் போய்க் கொலு பூராவும் துருவித் துருவிப் பார்த் தான். பொம்மையை யாரோ எடுத்து முதல் படிக்கட்டில் உள்ள ராமர் செட்டுடன் வைத்திருந்தார்கள். 'இது யார் செய்த வேலையாய் இருக்கும்' என்று எண்ணிப் பார்த்த கிருஷ்ணனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. 'சேச்சே அந்தப் பொம்மை இந்த யுவனுக்குப் பக்கத்தில் அல்லவா இருக்கவேண்டும்?'' என்று, முதல் படிக்கட்டிலிருந்த யுவ தியை மீண்டும் இளைஞனுக்குப் பக்கத்தில் வைத்துவிட்டு அதன் ஒற்றுமையை வியந்துகொண்டிருந்தான்.

அன்று மாலை கமலி வரவில்லை. கிருஷ்ணன் வெகு நேரம் வாயில் பக்கம் நின்றுகொண்டிருந்ததுதான் மிச்ச மாயிற்று. கடைசியில் மனமொடிந்து உள்ளே வந்த போது ஓர் ஏமாற்றம் காத்திருந்தது. கையில் கொடி வைத்திருந்த இளைஞன் பொம்மையைக் காணவில்லை. கமலியின் பெண் பொம்மைக்குப் பக்கத்தில் இருந்த அந் தப் பொம்மை, எப்படியோ குறத்தியின் அருகில் சென்று ஜம்மென்று வீற்றிருந்தது. இதைப் பார்க்கப் பார்க்கக் கிருஷ்ணனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. உள்ளத் திலே பொங்கிவரும் எரிச்சலோடு இளைஞனைத் தூக்கிப் பெண் பொம்மைக்குப் பக்கத்தில் சேர்த்துவைத்துவிட்டு, 'இப்படிப் பிரித்துப் பிரித்து வைப்பவர்களின் எண்ணம் தான் என்ன?' என்று ஆராயத் தொடங்கினான். 'கமலி யும் நானும் ஒன்று சேர்ந்து இருப்பதில் யாருக்கு நஷ்டம்?'

ஞாயிற்றுக்கிழமையன்று வீடு ஒரே கோலாகலமாக இருந்தது. வருவோரும் போவோரும் அதிகமாக இருந்த

நாள் அது. ஆனால், கமலியைத்தான் காணோம். அதற்குப் பதில் அவள் தாய் வந்திருந்தாள். "என்ன, உங்கள் கமலியைக் காணவே இல்லையே? ஊரில்தானே இருக்கிறாள். அல்லது உடம்பிற்கு ஏதாவது..." என்று தர்மு முகமன் கூறி வரவேற்றாள் கமலியின் தாயை.

கமலியின் தாய் கொலுவுக்கு முன் அமர்ந்துகொண்டாள், பிறகுதான் பேசினாள். "கமலிக்கு இரண்டு நாளாய் உடம்பு சரியில்லை. சாதாரண ஜுரம்தான். உங்களைப்பற்றித்தான் அடிக்கடி விசாரித்துக்கொண்டிருக்கிறாள்" என்றாள் அவள்.

கமலியின் தாய் கொலுவைக் கவனித்தபோது அவள் முகம் பிரகாசம் அடைந்தது. "நீங்கள் இந்தப் பொம்மையை எங்கே வாங்கினீர்கள்? இதைப் போலத்தான் கமலி ஒன்று வேண்டும் என்று ஜுரம் அடிக்கும் போதும் சொல்லிக்கொண்டிருக்கிறாள். எவ்வளவோ தேடினேன். கிடைக்கவில்லை" ன்று இளைஞன் ரூபத்தில் அமைந்தத் தேசத்தொண்டன் பொம்மையைச் சுட்டிக் காட்டிச் சொன்னாள்.

"இது ரொம்ப வருடங்களுக்கு முன் வாங்கினது. வேண்டுமென்றால் இதைத்தான் எடுத்துக் கொண்டு போங்களேன். ஜுரத்தில் உள்ள குழந்தைக்குத் திருப்தியாகஇருக்கும்" என்று அந்த இளைஞன் பொம்மையை எடுத்துக் கமலியின் தாயிடம் கொடுத்துவிட்டாள் தர்மு.

## 4

கமலியின் தாய் வெளியில் போனவுடன் சர்வேசுவரன் குடு குடு வென்று கொலுவின் பக்கம் ஓடி வந்தார். "கிருஷ்ணா!" என்று இரைந்து கூப்பிட்டார். கிருஷ்ணனும் அடக்கவொடுக்கமாக நல்ல பிள்ளை போல் உள்ளே வந்தான்.

"தர்மு, கமலி கொடுத்தாள் என்று ஒரு பொம்மையைப் பற்றிச் சொன்னாயே. அதற்குக் கால் முளைச்சிருக்கா? அது நடக்குமா?" என்று கேட்டார் சர்வேசுவரன்.

தர்மு ஆச்சரியத்தால் மலர மலர விழித்தாள். "எனக் கொன்றும் புரியலேயே?"

"உனக்கு என்ன புரியும்? கமலி கொடுத்த பொம்மையைத் தூக்கித் தூக்கி வேறு படிகளில் வைக்கிறேன். அது என்னடா என்றால் தேசத் தொண்டன் பொம்மைக்குப் பக்கத்தில் வந்துவிடுகிறது" என்றார் சர்வேசுவரன்.

"எனக்குத் தெரியாதே" என்றாள் தர்மு.

"தேசத் தொண்டரே, உமக்குத் தெரியுமோ" என்றார் சர்வேசுவரன் கிருஷ்ணனைப் பார்த்து.

கிருஷ்ணன் திரு திருவென்று விழித்தான்.

"நான் நினைத்ததைப் போலத்தான் எல்லாம் நடந்திருக்கிறது. கமலி அந்தப் பொம்மையைப் படிக்கட்டில் வைத்தபோதே எனக்கு எல்லாம் விளங்கிவிட்டது அதனால்தான் அதை எடுத்து வேறு இடத்தில் வைத்தேன். அதுவோ 'குபுக் குபுக்' என்று தேசத் தொண்டன் பக்கத்திற்கு வந்துவிடுகிறது" என்றார் சர்வேசுவரன்.

"இதெல்லாம் எதற்காகச் செய்தீர்கள்?" என்று சந்தேகமாகக் கேட்டாள் தர்மு.

"எதற்காகச் செய்தேனா? நம்ப கிருஷ்ணனுக்கும் ஜுரம் வராமல் இருப்பதற்காகத்தான். கமலிக்கு என்ன ஜுரம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறாய்? அதற்குப் பெயர்தான் தாப ஜுரம்."

"அதனால்தான் நம்ப வீட்டுப் பொம்மையைக் கொடுத்தனுப்பினேன்"

"பொம்மையைக் கொடுத்தாயா! அதைவிட நம்ப கிருஷ்ணனையே நீ கொடுத்திருக்கலாம்."

"எனக்கு ஒன்றும் இதுவரையில் தெரியலேயே? உங்களுக்கு எப்படிப் புரிந்தது?" என்று அதிசயத்துடன் கேட்டாள் தர்மு.

சர்வேசுவரன் கிருஷ்ணனைப் பார்த்து "என்ன தேசத் தொண்டரே, கவலைப்படாதேயும்; எல்லாவற்றையும் பெரியவர்களிடம் பேசி முடித்துவிட்டேன். வருகிற தையில் முகூர்த்தம்!" என்றார்.

